

10.7.79ஆம் தேதியன்று, திருவரங்கம் மேட்டழகியசிங்கர் கோயில், திருக்கல்யாண மண்டபத்தைத் திறந்து வைத்து, செய்தி - அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் சிறப்புரை ஆற்றுதல்.

முகப்பு :
காஞ்சிபுரம் அருள்மிகு
தேவராசசுவாமி திருக்கோயில்
உற்சவர் திருவுருவம்
(வேணுகோபாலர் ஒப்பனை)

# திருக்கோயில்

மாலை: 21 | சித்தார்த்தி ஆண்டு - ஆடித் திங்கள்—ஜூலை-1979 | மணி: 10

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

ஆணையர் அவர்கள்,
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை — 600 034

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப்பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. 15—00 உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங்களுக்கு, ஒரு இதழ் ரூ. 1—25 வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் ''சந்தாதாரர்'' ஆகலாம்.

தனிப்பட்ட 'சந்தாதாரர்கள்' ஒவ்வொருவரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் *[PINCODE]* எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக்கொள்ளப்படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும் செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறையாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற்பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. 9—60 ஆகின்றது. ஆதலால் வெளிநாட்டுச் சந்தா, ரூ. 20—00-ல் இருந்து ரூ. 25—00 ஆக ஜனவரி 1978 முதல் மாற்றி அமைக்கப் பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப் போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்



ஆசிரியர் : ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

இந்து சமய அறநிலைய (ஆட்சி)த் துறை வெளியீடு

# திருத்தலங்களும், இறைவன் - இறைவி திருப்பெயர்களும்

| தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
| --- | --- | --- |
| **சென்னை மாவட்டம் :** | | |
| 1. திருவொற்றியூர்<br>(பிரளய வெள்ளத்தைத் தன்மீது வரா மல் ஒற்றியிருக்கச் செய்த ஊர் ஆதலின் ஒற்றியூர் எனப் பெயர் பெற்றது).<br><br>(சென்னை நகரின் வடபுறத்தில் ஒரு பகுதியாக உள்ளது இதற்கு 'ஆதிபுரி' என்னும் பெயர் தலபுராணத்தில் வழங் கும். இங்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகள், சங்கிலி நாச்சியாரை, மகிழ மரத்தின் அடியில் மணந்தார். அதனால் இக் கோயிலில் நிகழும் 'மகிழடி சேவை' என்னும் திருவிழா மிகச் சிறப்பு வாய்ந் தது. இங்குக் கடற்கரைக்கு அருகில் பட்டினத்தடிகளாரின் சமாதிக் கோயில் உள்ளது.) | (1) ஒற்றியூர் உடையகோ,<br>(2) திருவொற்றியீசுவரர்,<br>(3) படம்பக்கநாதர்,<br>(4) மாணிக்கத் தியாகர்,<br>(5) தியாகராசர்,<br>(6) எழுத்தறியும் பெருமான்.<br>(7) புற்றிடங் கொண்டார்.<br>(''ஒற்றியூர் உடையகோவே'' என்று திரு நாவுக்கரசர் பாடல் ஒவ்வொன்றின் இறுதி யிலும் வரும். படம் எடுத்து ஆடும்வாசுகி என்னும் பாம்பை, இறைவன் தம் திரு மேனியின் ஒரு பக்கத்தில் சேர்த்துக் கொண்டதனால் 'படம்பக்கநாதர்' எனப் பெயர் அமைந்ததாகத் தலபுராணம் கூறும். படம்பக்கம் என்னும் ஒருவகை வாத்தியம் அத்தலத்திற்கே உரியதாக வாசிக்கப்பெற்றதனால், அப்பெயர் ஏற் பட்டது. ''படம்பக்கம் கொட்டும் திரு ஒற்றியூரீர்'' என்பது சுந்தரர் தேவாரம். ஏலேலசிங்கர் என்னும் அன்பருக்கு மாணிக் கங்கள் கொடுத்ததனால், மாணிக்கத் தியாகர், தியாகராசர். இத் தியாகராசர் மீது இராமலிங்க அடிகளார், சொற் பொருட்சுவைமிக்கு, அகப்பொருள் நலஞ் சான்று, கவிதை எழில்நிறைந்த 166 பாடல்கள் கொண்ட ''இங்கிதமாலை'' என்னும் நூலைப் பாடியுள்ளார். அரசன் ஒருவன் பஞ்சகாலத்தில் கோயில்களின் படித்தரங்களைக் குறைத்துஉத்திரவு பிறப் பித்த ஓலையில் 'திருவொற்றியூர் நீங் க லாக' என்று இறைவன் வரிபிளந்து எழு தியதனால் 'எழுத்தறியும் பெருமான்' என்பதும் பெயராயிற்று. இராமலிங்கர் பாடியுள்ள ''எழுத்தறியும் பெருமான் மாலை'', மிகவும் சிறப்பு வாய்ந்தது. | வடிவுடையம்மை,<br>வடிவுடைமாணிக்கம்.<br>(''வடிவுடையமங்கையும் தாமும் எல்லாம் வருவாரை எதிர்கண்டோம்'' - அப்பர். இவ்வம்மையின்மீது இராமலிங்கர் ''வடி வுடை மாணிக்கமாலை'' என்று 101 பாடல்கள் பாடியுள்ளார்.<br><br>இங்கேயுள்ள ''வட்டப்பாறையம்மன் என்னும் துர்க்கையின் சந்நிதியும் மிகவும் புகழ்பெற்றது. இச்சந்நிதியில் துர்க்கை வழிபாடும் பிரார்த்தனையும், சிறப்பு வாய்ந்தவை.) |
| 2. திருமயிலை<br>(மயிலாப்பூர், மயிலார்ப்பு, மயிலார்ப் | கபாலீசுவரர்<br>(சம்பந்தர் தேவாரத்தில் ''கபாலீச்சுரம்'' | கற்பகாம்பாள்<br>(''கல்லாடை புனைந்தருளும் கபாலியைக் |

| | | |
|---|---|---|
| பில் எனத் தேவாரத்தில் வழங்கும். Mylarpha எனத் தாலமி போன்ற வெளிநாட்டார் குறித்துள்ளனர். ''பல் பெருங்குடி நீடு பரம்பரைச் செல்வம் மல்கு திருமயிலாபுரி'' என்பர் சேக்கிழார். | என்னும் பெயர் ஒவ்வொரு பாடலிலும் வந்துள்ளது). | கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே''-அப்பர்). |
| 3. **திருவான்மியூர்** (வான்மீகி முனிவர் பூசித்தது; திருநாவுக்கரசர் தோன்றிய திருஆமூர், எட்டிகுடிக்கு அருகில் உள்ள திருவாய்மூர் என்பன, இதனின் வேறு). | (1) வான்மியூர் ஈசர் (அப்பர் தேவாரத்தில் பாடல் தோறும் பயின்றுள்ளது). (2) மருந்தீசுவரர் (''பிறவி மருந்தான பெருந்தகை'' என்று சேக்கிழார் பெரிய புராணத்தில் குறித்துள்ளார், (சம்.1023). (3) பால்வண்ணநாதர், தியாகராசர் எனவும் பெயர்கள் வழங்கும். | சொக்கநாயகி, திரிபுரசுந்தரி. |
| **செங்கற்பட்டு மாவட்டம்** | | |
| 4. **திருவேற்காடு** (வேலமரங்கள் நிறைந்த காடாகஇருந்த தலம். இப்போது இங்கு அண்மையில் தோன்றிய அருள்மிகு தேவி கருமாரியம்மன் திருக்கோயில் புகழ்மிக்கு விளங்குகிறது). | வேதவித்தகன் (''வேதவித்தகன் உறை வேற்காடு''-சம்பந்தர். வேதபுரீசுவரர் | வேற்கண்ணியம்மை, பாலாம்பிகை |
| 5. **காஞ்சிபுரம் (கச்சி)** (இந்நகரத்திற்குள்ளாகவே தேவாரப் பாடல் பெற்ற ஐந்து சிவத்தலங்களும், ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பெற்ற பதினான்கு வைணவத் திவ்விய தேசங்களும் உள்ளன). | **ஏகம்பர்** (''கச்சியேகம்பன்'' என்ற பெயர் தேவாரப் பாடல்களில் பயின்று வந்துள்ளது. மணிவாசகர் ''தேசம் எல்லாம் புகழ்ந்தாடும் கச்சித் திருவேகம்பன்'' என்று குறிப்பிட்டுள்ளார். தற்போது ஏகாம்பரநாதர் என வழங்கப்படுகிறது. ஏகம்-ஒன்று. ஆம்பரம்-மாமரம். ஒற்றை மாமரத்தின் கீழ் இருப்பவர் என்பது பொருள். இக்கோயிலிலுள்ள மாமரம், ஆயிரம் ஆண்டுகளுக்கும் முற்பட்டது என்று தாவர நூலார் கூறுகின்றனர். சங்க காலப் புலவர்களில் மாமூலனார் என்று ஒருவர் இருந்தார். ஏகாம்பரநாதர் என்னும் வடமொழிப் பெயரின் பொருளை **மாமூலனார்** என்னும் தமிழ்த் தொடர் சிறப்பாகக் குறிப்பிடுகின்றது). | **காமாட்சியம்மை** (இப்பெயர் சங்ககாலத்தில் 'காமக்கண்ணி' என வழங்கியிருந்தது. 'காமக்கண்ணியார்' என்ற பெண்பாற் புலவர் ஒருவர் சங்க காலத்தில் இருந்தார். காமாட்சியம்மை, காமக் கொடி எனவும் வழங்கப் பெறுவாள். ''கச்சிப் பொலி காமக்கொடியுடன் கூடி இச்சித்து இரும்பூளை இடங்கொண்ட ஈசன்'' என்பது சம்பந்தர் தேவாரம். காமாட்சியம்மை கோயில், காமக்கோட்டம் எனத் தேவார காலத்தில் வழங்கப்பெற்றிருந்தது. 'காரிரும் பொழிற் கச்சிமூதூர்க் காமக்கோட்டம் உண்டாக நீர்போய் ஊரிடும் பிச்சை கொள்வதென்னே ஓணகாந்தன் தளியுளீரே'' என்பது சுந்தரர் தேவாரம். 'ஏலவார்குழலி' என்பதும் காமாட்சியம்மைக்கு ஒரு பெயர். ''ஏலவார் குழலாள் உமைநங்கை என்றும் ஏத்தி வழிபடப்பெற்ற காலகாலனைக் கம்பன்எம்மானைக் காணக் கண் அடியேன் பெற்றவாறே'' என்பது சுந்தரர் தேவாரம்.) |

| தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|
| 6. **கச்சிஅநேகதங்காவதம்** (காஞ்சிபுரம் கயிலாச நாதர் கோயிலுக்கு மிக அருகில் உள்ளது.) | அநேகதங்காவதேசுவரர் (''ஆனையுரித்த பிரான்'' என்றும் வழங்கும். ''ஆனையுரித்த பிரானது இடம் கலிக் கச்சி அநேகதங்காவதமே'' என்பது சுந்தரர் தேவாரம்). | காமாட்சியம்மை |
| 7. **கச்சிநெறிக்காரைக்காடு** (இது திருக்காலீசுவரன் கோயில் என மருவி வழங்குகின்றது. திருக்காரைஈசுவரன்கோயில் எனவும் வழங்கும். தாஞ்சிபுரத்தின் வடகிழக்கில் உள்ளது. காரைச்செடி நிறைந்த காடாக இருந்த தலம்.) | கச்சிநெறிக் காரைக்காட்டார் (''தேரூரும் நெடுவீதிச் செழுங்கச்சி மாநகர் வாய் நீரூரும் மலர்ப் பொய்கை நெறிக் காரைக்காட்டாரே'' என்பது சம்பந்தர் தேவாரம். 'காரைத் திருநகர்'' எனவும் வழங்கும்). | காரார்குழலி |
| 8. **திருக்கச்சிமேற்றளி** (காஞ்சிபுரம் பிள்ளையார் பாளையத்தில் உள்ளது. தளி-கோயில். மால் தளி,மேற்றளி என்று மருவியிருக்கலாம். கச்சியின் மேற்குப் பகுதியில் உள்ள தளியாதலானும், மேற்றளி என்று பெயர் ஏற்பட்டிருக்கக்கூடும்) | மேற்றளிநாதர் ('செல்வியைப் பாகங்கொண்டார்' என்னும் திருப்பெயரும் கொள்ளலாம். ''செல்வியைப் பாகங்கொண்டார் சேந்தனை மகனாக் கொண்டார்'' என்பது அப்பர் தேவாரம்). | காமாட்சியம்மை |
| 9. **திருஓணகாந்தன்தளி** (பெரியகாஞ்சிபுரம் சர்வதீர்த்தத்திற்கு அருகில், அதன் வடக்கில் உள்ளது. ஓணன் காந்தன் என்னும் இரண்டு அசுரர்கள் பூசித்து அருள் பெற்றது.) | ஓணகாந்தஈசுவரர், ஓணகாந்தன் தளியுளார் (''உய்யுமாறு ஒன்றருளிச் செய்யீர் ஓணகாந்தன்தளியுளீரே'' என்பது சுந்தரர் தேவாரம்). | காமாட்சியம்மை |
| 10. **திருக்கழுக்குன்றம்** (''கழுகு தொழு வேதகிரி'' என்பது திருப்புகழ். நாள்தோறும் நண்பகலில் இரண்டு கழுகுகள் வந்து வழிபட்டு உணவு உண்டு செல்கின்றன.) | வேதகிரீசுவரர்<br>மலைமருந்தீசர்<br>மலைக்கொழுந்தீசர் | பெண்ணின்நல்லாள்அம்மை<br>மலைச்சொக்கநாயகி<br>திரிபுரசுந்தரி |
| 11. **திருமாற்பேறு** (திருமால்பூர் என மருவி வழங்குகிறது. வடமொழியில் அரிச் சக்கரபுரம் என வழங்குவர். காஞ்சிபுரத்திற்கு வடமேற்கில் 10 கி.மீ தொலைவில் உள்ளது) | மணிகண்டேசுவரர் (''சேறு சேர்வயல் தென் திருமாற் பேற்றில் மாறிலா மணிகண்டரே'' எனத் தேவாரத்தில் இப்பெயர் வந்துள்ளது). | அஞ்சனாட்சியம்மை, கருணைநாயகி |

| | | |
|---|---|---|
| 12. திருமுல்லைவாயில் (சென்னைக்கு மேற்கே 16கி.மீ.தொலைவில் உள்ளது. தெற்கே தஞ்சை மாவட்டத்தில் இப்பெயரால் வேறு ஒரு தலம் இருத்தலால், இது வடதிரு முல்லைவாயில் என வழங்கும்) | பாசுபதேசுவரர் மாசிலாமணி ஈசுவரர் ( ''முருகுஅமர்சோலைசூழ் திருமுல்லைவாயிலாய் வாயினால் உன்னைப் பரவிடும் அடியேன் படுதுயர் களையாய் பாசுபதா பரஞ்சுடரே'' என்பது சுந்தரர் தேவாரம்) | கொடியிடைநாயகி (''கூடிய இலயம் சதிபிழையாமைக் கொடியிடை உமையவள் காண ஆடிய அழகா'' சுந்தரர்) |
| 13. திருக்கச்சூர் ஆலக்கோயில் (திருக்கச்சூர் ஊரின் பெயர், ஆலக் கோயில், கோயிலின் பெயர். திருமால் கச்சபம் (ஆமை) உருவெடுத்துப் பூசித்த தலம். தல மரம் ஆலமரம். அதனால் ஆலக்கோயில் என்று பெயர் பெற்றது. செங்கற்பட்டுக்கு வடக்கேயுள்ள சிங்கப் பெருமாள் கோயில் நிலையத்தில்இருந்து வட மேற்கே 3 கி.மீ. தொலைவில் உள்ளது.) | விருந்திட்ட ஈசுவரர் இரந்திட்ட ஈசுவரர் (சுந்தரர் பசியைப் போக்க வீடுதோறும் சென்று இரந்து பிச்சை எடுத்து வந்து, விருந்துணவு அளித்ததனால் ஏற்பட்ட காரணப்பெயர்கள்). மலைமருந்தீசுவரர் (மலைக்கோயிலில் உள்ளவர். ''மாலை மதியே மலைமேல் மருந்தே'' என்பது சுந்தரர் தேவாரம்.) | மையார் தடங்கண் மடந்தை. (''மையார் தடங்கண் மடந்தை பங்கா'' என்பது சுந்தரர் தேவாரம். இது 'அஞ்சனாட்சியம்மை'' என இப்போது வழங்கி வருகின்றது.) |
| 14. திருஇடைச்சுரம் (சுரம்-மலையும் காடும் நிறைந்த பாலை நில வழி. அவ்வழியின் இடையில் அமைந்த தலமாதலின், இடைச்சுரம் எனப்பெயர் பெற்றது. செங்கல்பட்டு திருப்போரூர் பேருந்துப் பாதையில் உள்ளது.) | இடைச்சுரநாதர். (''இடைச்சுரம் மேவிய இவர்வணம் என்னே' என்பது சம்பந்தர் தேவாரம். ''இவர் வணம் என்னே'' என்று சம்பந்தர் வியந்து வினவியதற்கு ஏற்ப, கற்பூரதீபம் காட்டினால், இலிங்கத்தில் சுடரொளி படர்ந்து தோன்றும்.) | இமய மடக்கொடி |
| 15. திருஅச்சிறுபாக்கம் (சிவபிரான் முப்புரம் எரித்தபோது அவர் ஏறிய தேரின் அச்சுமுறிந்து இற்ற தலம். சென்னை விழுப்புரம் இருப்புப் பாதையில் ஒரு நிலையம்.) | பாக்கபுர ஈசர் ஆட்சிநாதர். (''அன்று இரண்டுருவம் ஆய எம் அடிகள் அச்சிறுபாக்கமது ஆட்சி கொண்டாரே'' —சம்பந்தர்.) | நுண்ணிடை அரிவை மெல்லியலாள் (''மின்திரண்டன்ன நுண்ணிடையரிவை மெல்லியலாளை ஓர் பாகமாய்ப் பேணி', சம்பந்தர். இப்போது 'சுந்தரநாயகி' என வழங்குகின்றது). |
| 16. திருக்கள்ளில் (இங்குக் கள்ளில் ஆத்திரையர் என்னும் சங்ககாலப் புலவர் ஒருவர் வாழ்ந்ததாகத் தெரிகிறது.) | கள்ளில்மேயஅண்ணல் (''கள்ளில்மேய அண்ணல் கழல்கள் நாளும் உள்ளுமேல் உயர்வு எய்தல் ஒருதலையே'' என்பது சம்பந்தர் தேவாரம். இப்போது சிவானந்த ஈசுவரர் என வழங்குகிறது.) | திருநீலமலர்ஒண்கண்தேவி (''திருநீலமலர் ஒண்கண்தேவி பாகம் புரிநூலும் திருநீறும் புல்கும் மார்பில்''-சம்பந்தர். இப்போது ஆனந்தவல்லி என வழங்குகின்றது.) |

| தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|
| 17. திருவெண்பாக்கம்<br>(இப்போது பூண்டி நீர்த் தேக்கம் உள்ள இடம். திருவுளம்பூர் என வழங்குகின்றது. இங்கு சுந்தரருக்கு இறைவன் ''உளோம் போகீர்'' என்று அருளிச் செய்தான். 'உளோம் போகீர்' என்பது மருவி, திருவுளம்பூர் என்று ஆயிற்று). | வெண்பாக்கநாதர்<br>(''ஏராரும் பொழில் நிலவு வெண்பாக்கம் இடம் கொண்ட காராரும் மிடற்றான்''-சுந்தரர்).<br>ஊன்றீசர்<br>(''உலகமெலாம் ஈன்றவனே வெண்கோயில் இங்கு இருந்தாயோ என்ன, ஊன்றுவதோர் கோல் அருளி உளோம் போகீர் என்றானே''-சுந்தரர்). | ஒண்நுதலி<br>(''ஒண்நுதலி பெருமானுர் உளோம் போகீர் என்றானே''-சுந்தரர்.<br>இப்போது 'கனிவாய்மொழி' என வழங்குகிறது.) |
| 18. திருப்பாசூர்<br>(பாசு - மூங்கில். மூங்கில் தலமரமாதலால், பாசூர் எனப் பெயர் பெற்றது. திருவள்ளூர்க்கும், திருஆலங்காட்டுக்கும் அருகில் உள்ளது. சோழன் ஒருவனைக் காப்பாற்றச் சிவபெருமான், அவனைக் கொல்லப் பகைவர்கள் விடுத்த பாம்பினை எடுத்து ஆட்டியருளிய தலம். சந்திரன் பூசித்த தலம்.) | பாசூர் அடிகள், பாசூர்நாதர்<br>(''தேம்பல் வெண்மதி சூடுவர் தீயதுஓர் பாம்பும் ஆட்டுவர் பாசூர் அடிகளே''-அப்பர்.) | தம்காதலியம்மை<br>(''தம் காதலியும் தாமும் வாழும் ஊர் போலும், பைங்கண் முல்லை அரும்பு ஈனும் பாசூரே'' சம்பந்தர். இப்போது பசுபதிநாயகி என வழங்குகின்றது.) |
| 19. திருஆலங்காடு<br>(ஆலங்காடு என்னும் பெயரில் வேறு தலங்களும் இருத்தலால், இது ''பழையனூர் ஆலங்காடு'' என வழங்கப்படும்.<br>''வஞ்சப்படுத் தொருத்தி வாழ்நாள்<br>கொள்ளும் வகை கேட்டு<br>அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டு<br>எம் அடிகளே''- சம்பந்தர்). | ஆலங்காட்டு அடிகளார்.<br>(''பாடினார் சாமவேதம் பைம்பொழிற் பழனை மேயார், ஆடினார் காளி காண ஆலங்காட்டு அடிகளாரே'' - அப்பர்.)<br>அண்டமுற நிமிர்ந்து ஆடும் அப்பன்<br>(''அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள்<br>அப்பனிடம் திருவாலங்காடே''<br>—காரைக்கால்அம்மையார்.)<br>''தேவர் சிங்கப்பெருமான்''<br>(''முத்தா முத்தி வரவல்ல முகிழ் மென் முலையாள் உமை பங்கா, சித்தா சித்தித் திறங்காட்டும் சிவனே தேவர் சிங்கமே''<br>-சுந்தரர்). | வண்டார்குழலி<br>(''வண்டார்குழலி உமை நங்கை பங்கா கங்கை மணவாளா''-சுந்தரர்.) |

| | | |
|---|---|---|
| 20. திருவிற்கோலம்<br>(சிவபெருமான் திரிபுரம் எரித்தற்காகத் தம் திருக்கையில் வில்லேந்திய கோலத்துடன் எழுந்தருளும் இடம். ''வெற்றிகொள் அவுணர்கள் புரங்கள் வெந்து அறச் செற்றவன் உறைவிடம் திருவிற்கோலமே''-சம்பந்தர்.<br><br>இப்போது இவ் ஊர் கூவம்என வழங்குகின்றது. கூகம், கூவம் என மருவியது. ''கொந்துலாம் மலர்ப் பொழிற் கூகம் மேவினான்''-சம்பந்தர்). | திரிபுரம் செற்றவர்,<br>(''திரிதருபுரம் எரிசெய்த சேவகன்''-சம்பந்தர்).<br>திரிபுராந்தகர்<br><br>ஐயன் நல் அதிசயன்<br>(''ஐயன் நல் அதிசயன்விண்ணோர்தொழும் மையணி கண்டேன்'' என்பது சம்பந்தர் தேவாரம். தீண்டாத் திருமேனி.) | திரிபுரம் செற்றவள்,<br>திரிபுராந்தகி. |
| 21. திருஇலம்பையங் கோட்டூர்<br>(அரம்பையர்கள் பூசித்த தலம். ''இலையினார் பைம்பொழில் இலம் பையங் கோட்டூர், இருக்கையாப் பேணி என் எழில் கொள்வது இயல்பே?''-சம்பந்தர்) | ''நீறணிந்து ஏறுகந்தேறிய நிமலன்'',<br>''திருமலர்க்கொன்றையான்''-சம்பந்தர்.<br>(இப்போது 'சந்திரசேகரர்' என வழங்குகிறது). | கோடேந்தும்முலையம்மை |
| 22. திருவூறல்<br>(இப்போது 'தக்கோலம்' என வழங்குகிறது. இங்குள்ள நந்தியின் திருவாயிலிருந்து இடையறாது நீர் ஊறிப் பெருகிக் கொண்டிருந்ததனால், இது திருவூறல் எனப் பெயர் பெற்றது. ''தேறல் இரும்பொழிலும், திகழ் செங்கயல்பாய் வயலும் சூழ்ந்த, ஊறல் அமர்ந்த பிரான் ஒலியார் கழல் உள்குதுமே''-<br>—சம்பந்தர்.<br><br>இப்போது சில ஆண்டுகளாக வயல்களிலெல்லாம் நீர்க்குழாய்கள் அமைக்கப்பெற்று விட்டதனால், நீரின் நிலமட்டம் மிகமிகக் குறைந்து, நந்தியின்வாயிலிருந்து நீர் ஊறிப் பெருகுவது நின்று போய்விட்டமை, ஒருவகையில் வருந்துதற்குரியது.<br><br>பெரியபுராணத்தில் இது ''கலிகை மாநகர்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது, திருக்குறிப்பு, 19.) | 'ஊனம் அறுத்த பிரான்'<br>(இப்போது உமாபதீசுவரர் என் வழங்குகிறது).<br>திருவூறல்நாதர்.<br>(இங்கு நீர் பெருகுவதனால் ஜலநாதேசுவரர் என்னும் பெயரும் இப்போது வழங்குகின்றது). | 'மலையான்மகள்'<br>(''மத்த மதக்கரியை மலையான் மகள் அஞ்ச, அன்று கையால் மெத்த உரித்த எங்கள் விமலன் விரும்பும்இடம்''-சம்பந்தர். இது இப்போது 'கிரிராஜ கன்னிகை' என வழங்கப்படுகிறது). |

| தலத்தின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|
| 23. திருவல்லம் (இப்போது திருவலம் என வழங்குகின்றது. தீக்காலி என்னும் அவுணன் பூசித்ததால், 'தீக்காலிவல்லம்' எனப் பெயர் பெற்றதாகச் சேக்கிழார் குறிப்பிடுவார். 'தீது நீங்கிடத் தீக்காலியாம் அவுணற்கு நாதர் தாம் அருள் புரிந்தது'' என்பது பெரியபுராணம்.) | திருவல்லநாதர் (வில்வம் தலமரமாதலால் வில்வவனநாதர் என்றும் கூறுவர்). | வல்லாம்பிகை (தனுர்மத்தியாம்பாள் என வழங்குவர். இதனை 'வில் இடை அம்மை' என்று வழங்கலாம்). |
| 24. திருவன்பார்த்தான் பனங்காட்டூர் (''மடையில் வாளைகள் பாயும் வன் பார்த்தான் பனங் காட்டூர்''-சுந்தரர். இது இப்போது திருப்பனங்காடு என வழங்குகின்றது). | பனங்காட்டுநாதர் (இதனைச் சிலர் தாலவன ஈசுவரர் எனவும் கூறுவர்.) | பஞ்சிச் சீறடியாள் (''பஞ்சிச் சீறடியாளைப் பாகம் வைத்து உகந்தான்'' -சுந்தரர். இப்போது தூல கோமள பதாம்பாள் என வழங்குகின்றது). |
| 25. திருவோத்தூர் (ஓத்து-ஓதப்படுவதாகிய வேதம்.வேதங்கள் பூசித்த தலமாதலால், இது திருவோத்தூர் எனப் பெயர் பெற்றது.இது இப்போது திருவத்திபுரம் அல்லது செய்யாறு என வழங்குகின்றது.) | ஒத்தூர்க்கூத்தன் (''ஒத்தூர் மேய ஒளி மழுவாள் அங்கைக் கூத்தீர் உம்மகுணங்களே'' —சம்பந்தர். இப்போது வேதபுரீசர் என வழங்குகின்றது). | இளமுலையம்மை (''இடையீர் போகா இளமுலையாளை ஓர்புடையீரே'' -சம்பந்தர். சிலர் பாலகுஜாம்பிகை என்பர்). |
| 26. திருமாகறல் (சோழ அரசன் ஒருவனுக்கு இறைவன் மாகறல் என்னும் ஒருவகை உடும்பாகக் காட்சி அளித்த தலம்.) | அடைக்கலம்காத்த நாதர், அகத்தீசுவரர் | புவனநாயகி திரிபுவனஈசுவரி |
| 27. திருக்குரங்கணில்முட்டம் (குரங்கு (வாலி), அணில், காக்கை (முட்டம்) என்னும் மூன்றும் பூசித்த தலம்.) | வாலீசுவரர் | இறையார்வளையம்மை ('இறையார் வளையாளை ஓர் பாகத்து அடக்கிக் கறையார் மிடற்றான்''-சம்பந்தர்) |
| 28. திருக்காளத்தி (சீகாளத்தி எனவும் தமிழில் வழங்கும். சீ-சிலந்தி, காளம் -பாம்பு,அத்தி-யானை ஆகிய மூன்றும் பூசித்த தலம். கண்ணப்பநாயனார் வழிபட்டு அருள் பெற்றது. இதனைச் சிலர் ஸ்ரீகாளஹஸ்தி என்பர்). | திருக்காளத்திநாதர் (''காளத்தியான் அவன் என் கண்ணுளானே''-அப்பர். ''காளத்தி காணப்பட்ட கணநாதன்''-அப்பர்.) | ஞானப்பூங்கோதையம்மை (''ஞானப்பூங்கோதையாள் பாகத்தான் காண்''-அப்பர்). |

—தொடரும்

*　　*　　*

திருவாரூர்க்

# கமலைப் பராசக்தி மாலை

## காப்பு

திருவார் கமலைத் திகழ்யோக பீடஞ் செழித்துவளர்
உருவா யருவு முபயமு மாகும் உயர்பரைதாள்
மருவார்வத் தால்நற் பராசக்தி மாலை வழுத்தியுய்ய
அருள்நாளும் நல்குவன் வாதாவி வாரண ஐங்கரனே

## முதல் நூல்

திருவும்வெண் டாமரைச் செல்வியு மாகிச் சிவனிடத்தின்
மருவு முமையாய் மகேசுவரியாகி மனோன்மணியாய்த்
தருபரை யாயுன் சரணே சரணென்று சாருமன்பர்
பருகுஞ் சிவானந்த மேதென் கமலைப் பராசத்தியே. (1)

சத்தியு மாகிச் சிவமுமா யுலகிற் சகலமுமாய்ச்
சித்தியு மாகியச் சித்தியேற் றோருஞ் செலற்கரிய
முத்தியு மாகி, அம் முத்திக்கு வித்தாய் முளைத்தெழுந்த
பத்தியும் ஞானமும் ஆகும் கமலைப் பராசத்தியே. (2)

நூலே நிகரெழி னுண்ணிடை யும்அந் நுணுகிடையின்
மேலே விளங்குகொங் கையும் மலரணி மென்கரமுஞ்
சேலே நிகரருட் பார்வையு மாயென சிந்தைநின்றாள்
பாலே நிகர்மொழித் தாயே கமலைப் பராசத்தியே (3)

புத்தகக் கையும் பளிங்கொளிர் மாலை புனைகரமும்
அத்த மிரண்டில் வரதா பயமும் அணிபலவும்
மொய்த்த சரச்சந்திர மேனி யாயுனை முன்னுமுயர்
பத்தர்க்கு வித்தையை நல்குங் கமலைப் பராசத்தியே. (4)

உன்னித் தியானிக்க மெய்ஞ்ஞான மேனியு முண்மையன்பாற்
பன்னித் துதிக்கத் திருநாம மும்பல பத்திசெய்ய
மன்னித் திகழ்கோ யிலுங்கொண் டெமையாள் மனோன்மணியே
பன்னித் திலநகைத் தாயே கமலைப் பராசக்தியே. (5)

ஈடணை மூன்றும் வெறுத்தே பரமத வீணர்வழித்
தூடணஞ் செய்து சுருதி சிவாகமஞ் சொல்லுமுண்மைக்
கோடணை யேவிழை மெய்யன்பர் கூட்டத்தைக் கூடியுனைப்
பாடப் பணிய வருள்வாய் கமலைப் பராசத்தியே. (6)

வேலே நிகர்விழிச் செவ்வாய் மடந்தையர் வேட்கைவெள்ளச்
சேலே யனைய மகாமோகத் தேனையுன் சேவடியென்
பாலே விளையுஞ் சிவானந்த வெள்ளத் தழுத்தவும்என்
பாலே கருணை புரிவாய் கமலைப் பராசத்தியே. (7)

கலியாணி யம்பிகை யாரணி வாரணி கௌரியுயர்
ஒலியா ரணங்காம் இருங்களத் தாயுன்னை யுன்னிநித்தம்
நலிதீ வினையகன் றுன்றிரு நாமம் நவில்பவர்க்குப்
பலியா தனவு முளவோ கமலைப் பராசத்தியே (8)

உயிரே யுயிரி னுணர்வே யுணர்வு முணரவொண்ணாச்
செயிர்தீர் சிவமே சிவஅறி வேயச் சிவவறிவின்
அயிரா தெழும்பர மானந்த மேயவ்வா னந்த அருட்
பயிரே நிகர்பத்தி தந்தாள் கமலைப் பராசத்தியே. (9)

தன்மாத் திரையைந்தும் ஐங்கணை யாகத் தரித்தவளே
சின்மாத் திரமா யுனை வேறற வுன்னுஞ் சிந்தையர்பால்
நின்மாத் திரம்பெற ஆனந்தங் காட்டி நிலைபெறச் செய்
பன்மாத் திகழ்குயில் கூவுங் கமலைப் பராசத்தியே. (10)

நீயே னுளக்கற் றடத்தேநின் சேவடிச் செங்கமலம்
தாயே யரும்புங் கொலொஉமை யேஉயர் தண்ணிமயச்
சேயே திரிபுர சுந்தரி யேவிடஞ் சேர்அரவு,அன்
பாயே யுகந்தவன் போற்றுங் கமலைப் பராசத்தியே. (11)

கண்ணாதி யைந்தும் மனமாதி நான்குங் கலந்துலகில்
ஒண்ணாவுன் பாதத்தை யொன்றி யுணர வுலகனையே!
பெண்ணாகி யானுரு வாயுல கீன்ற பெரும்பரையே
பண்ணார் மொழிச்சுந் தரியே கமலைப் பராசத்தியே. (12)

திருப்பாற் கடல்நடு மாமணித் தீவிற் செனித்தகற்ப
தருப்பால் நெருக்கிய வேலியின் நாப்பண் தழைகதம்ப
விருப்பா ரணியச் சிந்தா மணிமாலிகை மேவுசிவப்
பருத்தாள் மணிமஞ்சம் வாழுங் கமலைப் பராசத்தியே (13)

காலைத் தினகரன் அன்னசெம் மேனியுங் கையிற்பற்றும்
மாலைச் சிலையும்நற் பாசாங் குசமும் மலர்க்கணையும்
சேலைப் பொரும்மருள் நோக்குங் கத்தூரித் திலகமுமாய்ப்
பாலைக் கடுத்த உரும்ஆள் கமலைப் பராசத்தியே. (14)

அருணா சலமெய்ய னுள்ளத் தடத்தும் அசபைநடம்
புரிதே வரகண்டர் மாமனத்தும் நாமம் புகலிடத்துந்
திருயோக பீடத்தும் என்றுஞ் செழித்தருள் செய்பரையே
பருமா மணிநிறைத் தாயே கமலைப் பராசத்தியே. (15)

காமாதி யோடுங் கலந்தகங் காரமென் கட்டழியப்
போமா றழுமடி யேனுய்யு மாறெவன் பூரணியே
வாமாதி எண்மருஞ் சூழ வளரும் மனோன்மணியே
பாமாண் புறச்சொற்கள் நல்குங் கமலைப் பராசத்தியே. (16)

வரையினின் மாசு மலிசத்தி யாற்சத்தி மண்ணுலக
நிரையிற் படைத்தயன் மாலளித் தேயுயர் நின்மலனும்
தரைமுதல் யாவுந் துகளாக்கி மூவர் நிற்குநரேற்
பரையேநின் மேன்மை எவரே யறிவார் பராசத்தியே. (17)

செக்கச் சிவந்த திருமே னியும்இடச் செம்மலர்க்கை
யொக்கற் செறிய வலக்கரம் நீல மலரொளிரத்
தக்கயோ காசன மாயோக பீடத்திற் சார்ந்தமலன்
பக்கத் தமர்ந்தவ ளேதென் கமலைப் பராசத்தியே. (18)

கதிர்மதிக் கெதிரிருள் தாரகை சேர்ந்தொளிர் காட்சியென்ன
அதிசயங் காட்டு மியல் மணக்கூந்த லணிமுடியாய்
மதிசிலை யாழி குமிழாடி துப்பு மணிக்கமலம்
பதியெழில் காட்டும் முகத்தாய் கமலைப் பராசத்தியே. (19)

துப்புத் தொழுதி கயல்தாரற் றிரையென் றுலக்கருணம்
பப்புமருண் மெய்யி லார்த் தண்டாரணி கள்கவின
விற்பொதி செக்கர் நிகர்ப்பவுட் டாமரை யென்னுமலர்ப்
பற்பல மாதர்க்கும் வேறாங் கமலைப் பராசத்தியே (20)

அரனார்க் குரிய வலப்பா கமும்நின் னணியிடமுந்
திரமாயொன் றாமெழில் நோக்கிச் சகியர் சிலர்நகைப்ப
வரமாம் நினது நகையால் வரமதி மந்தஞ்செய்து
பரமாஞ் சுகந்தருந் தாயே கமலைப் பராசத்தியே. (21)

அரனார்க் கிலங்கணி யேது?உரு வேது?இசை யாது?அனமே!
உரமாந் தொழிலைந்து மேதின்ப மேதறி வொண்படையுந்
தரமாம் மனைவியும் ஏது?இல்லை நீயெனிற் றற்பரையே
பரனாரை யாரறி வார்தென் கமலைப் பராசத்தியே. (22)

தூண்டிய சோதி யனையாய் நின்பாதந் தொழுபவருள்
வேண்டிய யாவையும் வேண்டு மளவின் மிகவருள்வோய்
ஈண்டிய வல்வினை யெல்லா மகற்று மிறைவிசெல்வப்
பாண்டியன் மாமக ளாகுங் கமலைப் பராசத்தியே. (23)

செங்கதி ராற்றிசை பத்தையுஞ் செம்மைசெய் செவ்வுருவ
அங்கைகள் நான்கில் வரதா பயமணி யக்கவடம்
துங்கநற் புத்தகந் தாங்கி யணிகள்செந் தூ சணியும்
பங்கய ஆனனப் பாலை கமலைப் பராசத்தியே. (24)

அல்லியங் கோதைநல் வன்மீக நாதருக் கார்ந்தகொடி
மெல்லியல் பாகம் பிரியாள்நன் பாலொத்த மென்மொழியாள்
நல்ல தியாக விநோதருக் காகி நலமருவிப்
பல்லியல் நாமம் பெறுவாள் கமலைப் பராசத்தியே. (25)

கல்வியும் ஞானமும் பல்வகைப் போகமுங் கட்டழகுஞ்
செல்வமு மின்பமும் நன்மனை யாளுந் திறலரசும்
நல்வள மைந்தருஞ் சித்தியும் முத்தியும் நாடியுனைப்
பல்வகைப் பத்தி புரிவோர்க் கருளும் பராசத்தியே (26)

விரியுஞ் சிவானந்த வாரிதி யேயுன் வியாபகத்திற்
பிரிவின்றி யென்று முலாவுவன் யான்;பெரும் பேதைமைக்கே
உரியவென் னுள்ளத் துணர்வாக வாழ்தி; உறுமெனக்குப்
பரிபூரணி குறை யேதோ கமலைப் பராசத்தியே. (27)

மரகத மேனியுஞ் செங்கையில் வீணையும் வாய்மலரிற்
புரமெரித் தோருண் மகிழிசைப் பாட்டும் பலவகைப்பூண்
வரமலி நல்லெழின் மேனிசேர் மாதங்கி யாகவுன்னைப்
பரவுவ ரிசைவலா ரார்க்குங் கமலைப் பராசத்தியே (28)

எங்கும் நிறைந்த பரம்பொருள் நீயென்று மெவ்வுயிர்க்குந்
தங்குஞ் சடங்குஞ் சார்தொழி னீயன்றி யில்லையென்றும்
பொங்கும் மறைசொலு மேதோ வினையேற் புணர்தலருள்
பங்கும் புகுந்தரன் மேனியு மாகும் பராசத்தியே. (29)

வேதமும் வாழிமெய் யாகமம் வாழி வியன்றரும
போதமும் வாழி புனிதரும் வாழி புவியும் விண்ணும்
ஏதமற் றோங்க இறைவரும் வாழி இயம்பியநாற்
பாதமும் வாழக் கமலையில் வாழும் பராசத்தியே. (30)

---

# சமயச் சான்றோர்களின் தமிழ்ப்பற்று

ந. ரா. முருகவேள், M.A.,M.O.L.

முன்னுரை :

தமிழ்நாட்டில் தோன்றியருளிய சான்றோர்கள் அனைவரும், தமிழ் மொழியினிடத்து அளவற்ற அன்பும் ஆர்வமும் பக்தியும் கொண்டிருந்தனர். எல்லாப் பற்றுக்களையும் துறந்து, ''பற்றுக பற்றற்றான் பற்றினை'' என்றபடி, கடவுட் பற்று ஒன்றுமட்டுமே கொண்டிருந்த ஆழ்வார்கள், நாயன்மார்கள் போன்ற சான்றோர்களும்கூட, தமிழ் மொழியின்பால் எல்லையற்ற ஈடுபாடும் பற்றும் கொண்டு விளங்கினர். எல்லாப் பற்றுக்களையும் பற்றற நீத்த அவ் அருளாளர்களுக்கும், தமிழ்ப்பற்று விடமுடியாததாக, விடவேண்டாமல் இன்றியமையாது இருந்து தீரவேண்டிய சிறந்த பண்புநலமாக, அமைந்திருந்தது. ''பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீர் இறைத்தேன்; உற்றலால் கயவர் தேறார் என்னும் கட்டுரையோடு ஒத்தேன்'' எனவரும் திருநாவுக்கரசரின் திருமொழியும் இங்குச் சிந்தித்தற்பாலது.

மக்கள் தம் கருத்தை வெளியிடுவதற்கு உரியதொரு வெறும் கருவியாகவே (A mere vehicle for thought and expression) ஒரு சிலர் தமிழ்மொழியினைக் கருதுவதுண்டு. ஆனால் தமிழகத்தில் தோன்றிய சான்றோர்கள் அனைவரும், அத்தகையதொரு சாதாரண வெறும் கருவியாகத் தமிழ்மொழியினைக் கருதிற்றிலர். தமிழ்மொழியினைத் தெய்விக நலம் சான்ற மொழியாகவும், உண்மையில் ஒரு தெய்வமாகவுமே, தமிழகத்துச் சான்றோர்கள் அனைவரும் போற்றிப் பாராட்டி வந்துள்ளனர். தமிழணங்கு என்றும், தமிழ்த்தாய் என்றும், தமிழ்த்தெய்வம் என்றும், பலவாறு சான்றோர் பெருமக்களால் தமிழ்மொழி போற்றித் துதிக்கப்பெற்றிருத்தல் காணலாம்.

மறைமுதற் கிளந்த வாயான்
  மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர், தம் பெயரை நாட்டி
  இலக்கணம் செய்யப் பெற்றே,
அறைகடல் வரைப்பிற் பாடை
  அனைத்தும்வென் றாரி யத்தோடு
உறழ்தரு தமிழ்த்தெய் வத்தை
  உள்நினைந் தேத்தல் செய்வாம்
    —சிவப்பிரகாசசுவாமிகள்.

இங்ஙனம் வாழையடி வாழையாகத் தொன்றுதொட்டுத் தோன்றியருளிப் போந்த நம் தமிழகத்துச் சமயச் சான்றோர்கள் பலரும், தமிழ்மொழியின்பாற் கொண்டிருந்த பேரன்பின் திறனை விளக்கும் ஒருசில இலக்கியச் சான்றுகளை மட்டும் ஈண்டுக் காண்போம்.

சம்பந்தர் :

(1) திருஞானசம்பந்தர், தமிழ் மொழியின் சிறப்பினைத் தமது திருப்பதிகத்தின் திருக்கடைக்காப்புச் செய்யுள் ஒவ்வொன்றிலும், பற்பல வகையாகச் சிறப்பு அடைமொழிகள் கொடுத்துப் போற்றியருளி இருக்கின்றார். தமிழ்மொழி ஆர்வத்திலும் பற்றிலும் அவர் மிகவும் தலைசிறந்து விளங்கினார்.

தமிழின் நீர்மை பேசித் தாளம்
  வீணை பண்ணி நல்ல
முழவம் மொந்தை மல்கு பாடல்
  செய்கை இடம் ஓவார்;
குமிழின் மேனியது தந்து
  கோல நீர்மையது கொண்டார்
கமழும் சோலைக் கானூர் மேய
  பவள வண்ணரே!

''தமிழின் நீர்மை பேசப்படும் இடங்களிலெல்லாம் இறைவன் சிறிதும் அகலாமல் அங்கேயே நிலைபெற்று எழுந்தருளி விளங்கியருள்வான்'' என்பதனை வலியுறுத்தி, இறைவனின் இன்னருளைப் பெறுவதற்கு இனிய தமிழால் வழிகண்டவர் திருஞானசம்பந்தரே யாவர். அதனாலேயே திருநாவுக்கரசர் முதலாக இராமலிங்க அடிகளார் ஈறாக, வாழையடி வாழையென வந்த தமிழ்ச் சைவச் சான்றோர் அனைவரும், திருஞான சம்பந்தரைத் தனிப்பெரும் தலைவராக மதித்து விரும்பிப் போற்றி மகிழ்வாராயினர்.

திருநாவுக்கரசர் :

(2) இங்ஙனமே 'தமிழ்மொழித் தலைவர்' எனச் சேக்கிழாரால் சிறந்தெடுத்துப் போற்றப்பெறும் திருநாவுக்கரசர் பெருமான், தமிழின் மாட்டுக் கொண்டிருந்த அன்புக்கும் ஆர்வத்திற்கும் அளவேயில்லை. இறைவனையே

அவர் 'தமிழன்' என்று சிறப்பாகக் குறிப்பிடுவதுடன், ''தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்'' என்றும், ''வாயிருந் தமிழே படித்து ஆளுறாமையினால்தான்'' அமணர் அழிய நேர்ந்தது என்றும் அருளிச் செய்கின்றார்.

**சுந்தரர் :**

(3) சுந்தரமூர்த்தி சுவாமிகள், இறைவனைப் ''பண்ணிடைத் தமிழ் ஒப்பாய் பழத்தினில் சுவையொப்பாய், கண்ணிடை மணியொப்பாய்'' எனப் புகழ்கின்றார். சிவபெருமான் ''நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கு அரசரும் பாடிய நற்றமிழ் மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகப்பான்'' என்று இயம்புகின்றார். ''இருந்து நீர் தமிழோடு இசைகேட்கும் இச்சையால் காசுநித்தல் நல்கினீர்'' என்று பாடி இறைவனைப் பரவுகின்றார். ''செந்தமிழ்த் திறம் வல்லிரோ? செங்கண் அரவம் முன்கையில் ஆடவே வந்து நிற்கும் இது என் கொலோ?'' எனத் திருப்பைஞ்ஞீலி ஆரணிய விடங்கர் ஆகிய சிவபெருமானை வினவும் முறையிற் பாடியிருத்தலால், செங்கண் அரவின் கொடிய நஞ்சை நீக்கிப் போக்கவல்ல ஆற்றல் மிக்கதிறம், செந்தமிழ் மொழிக்கே உண்டு என்பது,சுந்தரரின் துணிபாதல் புலனாகின்றது.

**மணிவாசகர் :**

**(4) கருங்கல் மனத்தவரும் கரைந்துருகிக் களிதுளும்பும்படி திருவாசகம் என்னும் செந்தமிழ் மாமறையினை அருளிச் செய்த மாணிக்க வாசகர் ''தண்ணார் தமிழ்'' என்றும், ''சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான் உயர்மதிற்கூடலின் ஆய்ந்த ஒண் தீந்தமிழ்'' என்றும் குறிப்பிட்டுத், தமிழ்மொழியின்பால் தமக்குள்ள எல்லையற்ற** ஈடுபாட்டினைப் புலப்படுத்தி அருளியிருக்கின்றார்.

**ஆழ்வார்கள் :**

(5) முதலாழ்வார்களில் ஒருவராகிய பூதத்தாழ்வார் ''ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணர்க்கு ஞானத்தமிழ் புரிந்த நான்''என்றும், ''இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன் பெருந்தமிழன் நல்லேன் பெரிது'' என்றும், தமிழின் சிறப்பினைப் போற்றியுள்ளார்.

(6) பெரியாழ்வார் 'தூயதமிழ்' 'சீர்மலி செந்தமிழ்' 'இன்பத்தமிழ்' 'விட்டு சித்தன் விரித்த தமிழ்' எனப் பலவகைகளில் தமிழின் சிறப்பினைப் பெரிதும் போற்றியிருக்கக் காண்கின்றோம்.

(7) ''அஞ்சு குடிக்கு ஒரு சந்ததியாய் ஆழ்வார்கள் தம் செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய்'' விளங்கிய ஆண்டாள் நாச்சியார், ''சங்கத்தமிழ்'', 'செந்தமிழ்' 'தூயதமிழ்' 'கோதைதமிழ்' என்றெல்லாம் அருளிச் செய்திருத்தல், தமிழின்பால் அவருக்கிருந்த அன்பின் மிகுதியைப் புலப்படுத்தும்.

(8) இவ்வாறே குலசேகர ஆழ்வார்'நடைவிளங்கு தமிழ்', 'சொல்லின் இன்தமிழ்' 'நற்றமிழ்' சீரார்ந்ததமிழ், நல்லியல் இன்தமிழ், 'அந்தமிழின் இன்பப்பா' 'செந்திறந்த தமிழோசை' என்றெல்லாம், போற்றிப் புகழ்ந்து நவின்றிருக்கக் காண்கிறோம்.

(9) திருமங்கையாழ்வார் 'இருந்தமிழ் நூற்புலவன்' என்று தம்மைக் குறிப்பிட்டுக் கொண்டு மகிழ்கின்றார்.

(10) ஆழ்வார்களில் தலைசிறந்தவராகிய நம்மாழ்வார், 'பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம்' என்னும் தொடரில் 'பாலேய் தமிழ்' என்றும் பிறவாறும் இனிய தமிழின் இயல்பினை எடுத்தோதி யிருப்பதுடன், 'வண்டமிழ் நோற்கலுற்றேன் அடியார்க்கு இன்பமாரியே' என்றும் அருளிச் செய்திருத்தல் காணலாம்.

(11) தொண்டரடிப் பொடியாழ்வார், தாம் பாடிய திருமாலையில், அரங்கநாதர் ''குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கி அரவணைத் துயில்கின்றார்'' என்னும் கருத்தமையப் பாடியுள்ளார். அப்பாசுரத்தின் விரிவுரையில், ''வடக்குத் திக்கு முரட்டு சம்ஸ்கிருதம் நடையாடுவதாகி, ஆழ்வார்களின் செவிக்கினிய ஈரச்செஞ்சொல் நடையாடாத தேசம் ஆகையாலே, அத்திக்கிலுள்ளார் எல்லாரும் ஈடேறுதற்கு ஏற்படவேண்டிய பின்னழகையெல்லாம் பெருமாள் காட்டியருளினார்'' எனவரும் பகுதி, ஆழ்வார்களின் செவிக்கினிய ஈரச்செஞ்சொல் அமைந்த தமிழின் சிறப்பினை விளக்கியருளுவதாதல் காணலாம்.

இங்ஙனம் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தமிழ்மொழியினைப் புகழ்ந்து போற்றியிருத்தலின், அவர்களுக்குப் பின்னர் வந்த சான்றோர்கள் அனைவரும்கூட,அப்பெரு மக்களின் அடிச்சுவட்டினைப் பின்பற்றித் தமிழ் மொழியின்பால் ஆராத காதல் அன்புகொண்டு போற்றிப் பாராட்டி மகிழ்ந்துள்ளனர்.

**சேக்கிழார் :**

(12) சேக்கிழார் பெருமான் ''அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல'', ஞானசம்பந்தர் தோன்றியருளியதாக நவிலுகின்றார். அருணகிரிநாதர் முருகனைத் தமிழ்க் கடவுள் என்றும், செந்தமிழ் நூல் விரித்தோன் என்றும், முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன் என்றும், சிவபெருமானுக்குப் பிரணவப் பொருளை முருகன் தமிழ் மொழியாலேயே பகர்ந்தருளினன் என்றும் குறிப்பிடுகின்றார்.

''கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத்
தெரியக்
கொஞ்சித் தமிழால் பகர்வோனே''

—அருணகிரிநாதர்

### சிவப்பிரகாசர் :

(13) துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், ''சிவபெருமான் அருளிச் செய்த வேதம் மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகம் என்னும் இரண்டில், எது சிறந்ததென்று கேட்பீர்களாயின், வேதம் ஓதின் விழிநீர் பெருக்கித் தமது நெஞ்சம் நெக்குருகி நிற்பவர்களைக் காண்கிலோம். திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின் கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள் தொடுமணற்கேணியில் சுரந்து நீர்பாய மெய்ம் மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்பு எய்தி அன்பர் ஆகின்றனர்; வேதம் ஓதும் மற்றவர்கள் அங்ஙனம் ஆகின்றிலர்!''. இதனால் வேதம் திருவாசகம் என்னும் இரண்டில் எது சிறந்தது என்பதனை நீவிர் ஓர்ந்துணர்ந்து அறிந்து கொள்ளலாம் எனக் குறிப்பின் மொழிந்துள்ளனர்.

> ''வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
> நெஞ்சம் நெக்குருகி நிற்பவர்க்
> காண்கிலேம்!
> திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின்,
> கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
> தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
> மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்பு
> எய்தி
> அன்பர் ஆகுநர்; அன்றி
> மன்பதை உலகில் மற்றையர் இலரே''
>
> —சிவப்பிரகாசர்

மேலும் திருவாசகம் எல்லாரும் ஓதும் இயற்கைத்து ஆதலின் பொற்குடம் நிகர்க்கும் என்றும், வேதம் ஒரு சிலரே ஓதும் உரிமையுடையதாகக் கூறப்படுதலின் மட்குடம் நிகர்க்கும் என்றும், வேதம் ஓதினாற் பெறும் பயன் வெறும் அறமே, திருவாசகம் ஓதினால் உறும் பயன் சிறந்த பெருமுத்தியாகும் என்றும், அவர் திறம் தெரிந்து விளக்கியருளியிருக்கின்றார்.

> ''தேன்தேக் கெறியும் செய்ய மாணிக்க
> வாசகன் புகன்ற மதுர வாசகம்
> யாவரும் ஓதும் இயற்கைத்து ஆகலின்
> பொற்கலம் நிகர்க்கும்; பூசுரர் நான்மறை
> மட்கலம் நிகர்க்கும்; மதுர வாசகம்
> ஓதின் முத்தி உறுபயன்;
> வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே''
>
> —சிவப்பிரகாசர்

(14) வடக்குத் திருவீதிப்பிள்ளை திருக்குமாரரும், பிள்ளை லோகாசாரியருடைய திருத்தம்பியாரும், வைணவப் பெருஞ் சான்றோருமாகிய அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், தாம் அருளிய ஆசாரிய இருதயம் என்னும் அரும்பெரும் நூலில் வேதத்தை மிருத்கடம் (மட்குடம்) என்றும், திவ்வியப் பிரபந்தத்தைப் பொற்குடம் என்றும் ஒப்பிட்டு, ''மிருத்கடம் போலன்றே பொற்குடம்'' என்று மேற்குறித்த துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் கருத்தையே வலியுறுத்தி அரண் செய்திருத்தல் காணலாம்.

### வேதாந்த தேசிகர் :

(15) இங்ஙனமே வேதாந்த தேசிகர் என்னும் வைணவப் பெருஞ்சான்றோரும், தாம் இயற்றிய அதிகார சங்கிரகம் என்னும் நூலில், வேதங்களில் உண்டாகும் சந்தேகங்களைத் தெளிந்து கொள்ளுவதற்குத் திவ்வியப் பிரபந்தங்களே துணை புரிகின்றன என்னும் கருத்தை,

> 'செய்யதமிழ் மாலைகள்நாம் தெளியஓதித்
> தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே'

என்று அறுதியிட்டு, உறுதியாக அருளிச் செய்துள்ளார். ''பாஷ்யகாரர் இதுகொண்டு சூத்திர வாக்கியங்களை ஒருங்க விடுவர்'' என்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் இவ்வுண்மையைச் செவ்விதின் வெளியிட்டருளியிருக்கின்றார்.

### நம்பிள்ளை :

(16) திருவாய்மொழிக்கு ஈடு என்னும் இணையற்ற விரிவுரை இயற்றிய நம்பிள்ளை என்னும் வைணவப் பெருஞ்சான்றோரும், இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில், ''சக்கிய மலையிற் கலங்கின நீரானது, ஒரோ பிரதேசங்களிலே வந்து தெளிந்து உபயோகயோக்கியம் ஆமாறுபோல, ஆதிக்கிருதாதி காரமாய்க் கூளமும் பலாப்பிசினும் போல ஒன்றை நிஷ்கர்ஷித்துப் பிரிக்கவொண்ணாத படியாய் இருக்கிற வேதார்த்தமானது, சர்வாதிகாரமாய் சர்வசம்சயங்களும் தீர்ந்து தெளிந்தது, இவர் (நம்மாழ்வார்) பக்கலிலே வந்தவாறேயன்றோ'' என்று வடமொழிக்கண் உள்ள வேதங்களிலும், தமிழ்மொழியின்கண் உள்ள நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்கள் மிகவும் சிறப்புடையன, என்பதனை வலியுறுத்தி எழுதியிருத்தல் காணலாம்.

### அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் :

(17) அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும், தமது ஆசாரிய இருதயம் என்னும் நூலில், ''உயர்ந்த நிலத்தினின்றும் வேகத்தோடே வந்து நிலத்தில் விழுகையால் மண்ணோடு கூடியதாய்க் கலங்கிய சக்கியமலையின் தீர்த்தமானது, திருவரங்கத்திலுள்ள தோதவத்தித் துறையிலும், திருக்குருகூரிலுள்ள திருச்சங்கணித் துறையிலும், தெளிந்த நீராகித் தனக்குள்ளே கிடக்கின்ற பொருள்களை நன்கு விளங்கக் காட்டுமாறு போல, தன் கருத்தை அறியாமல் தம் நெஞ்சில் தோன்றியதையே சொல்லுகின்ற சிற்றறிவாளர் கலக்கக் கலங்கின வேதமானது, (அல்பச்ருதர் கலக்கின சுருதி) மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார் பக்கலிலே வந்து சேர்ந்தபின்பே, கலக்கம் தீர்ந்து தெளிவை அடைந்து, ஆழ் பொருள்களையெல்லாம் அறிவிக்க வல்லதாயிற்று'' என்றும் பிறவாறும் எழுதியுள்ள பகுதிகள், மேற்குறித்த வேதாந்த தேசிகரின் கருத்தையே வலியுறுத்தி நிற்றல் காணலாம். ''செந்திறத்த தமிழ்'' என் கையாலே ''ஆகஸ்த்யமும் அநாதி''

(ஆகஸ்த்யம் - அகத்திய முனிவர் வளர்த்த தமிழ் மொழி); ''வடமொழிமறை என்பது தென்மொழி மறையை நினைத்திறே'' என்று அவர் அருளிச் செய்திருப்பன பிறவும், நாம் போற்றி இங்குப் பெரிதும் அறிந்துணர்ந்து மகிழ்தற்குரியன.

**நம்பி திருவழுதி வளநாடுதாசர் :**

*(18)* ''நம்பி திருவழுதிவளநாடு தாசர், கீதை அப்யசித்தானொருவன் சந்த்யாசதஸ்சிலே சென்றால், பலருமாக நாழி அரிசியைக் கொடுத்து விசுவசிக்க மாட்டாமையாலே புறந்திண்ணையிலே கிட என்பார்கள்; திருவாய்மொழி கற்றான் ஒரு விண்ணப்பம் செய்வான் சென்றால் சர்வேச்வரன் அகப்படப் புறப்பட்டெதிர்கொண்டு அகமொழித்துக் கொடுத்து அமுது படியுமெடுத்துவிட்டு சத்கரிப்பர்கள் என்பார்'' எனவரும் திருவாய்மொழி ஈட்டு உரைப் பகுதியும், வடமொழியிலுள்ள கீதையினும், தமிழ் மொழியிலுள்ள திவ்வியப் பிரபந்தங்கள் மிகவும் சிறப்புடையன என்று வலியுறுத்தி யிருப்பது, இங்கு நாம் கருதிப் பெரிதும் மகிழ்தற்குரியது.

**முதலியாண்டான் :**

*(19)* இராமாநுசர்க்குப் பாதுகையும் தண்டும்போல் விளங்கியிருந்த முதலியாண்டான் என்னும் வைணவப் பெருந்தகையார், தமிழின் இறைமை இயல்பினை உள்ளவாறு உணர்ந்து போற்றியுள்ளார். திருவாய்மொழியில் ''எங்கள் கண்முகப்பே'' எனத் தொடங்கும் பாசுரத்திற்குரிய ஈட்டு உரையில் குறிப்பிடப்பெற்றுள்ள பின்வரும் செய்தி, இங்கு நாம் அறிந்து இன்புறற்குரியது. அது வருமாறு:

திருவரங்கத்தில் பெருமாள் திருவோலக்கம் வீற்றிருந்தார். அப்போது ஒரு பக்கத்தில் வைணவர்களும், மற்றொரு பக்கத்தில் ஆய்ச்சிகளும் நின்றுகொண்டு பெருமாளைச் சேவித்துக் கொண்டிருந்தனர். அப்போது அங்கே போந்த வங்கிப்புரத்து நம்பி, வைஷ்ணவர்கள் நிற்கின்ற பக்கத்தில் நில்லாமல் ஆய்ச்சிகள் நிற்கின்ற பக்கமாகச் சென்று கலந்து நின்றார். அதை முதலியாண்டான் கண்டு, அவரை நோக்கி ''இது என்? நம் வைணவத் திரளில் சேராமல் ஆய்ச்சியர்கள் பக்கம் சென்று நீர் நிற்பது எற்றுக்கு?'' என்று வினவினர். அதற்கு வங்கிப்புரத்து நம்பி, முதலியாண்டானை நோக்கி ''நாம் எப்படியும் பலவகை அபிமானம் பாராட்டி அகங்கார மமகாரங்களையுடையவர்களாக இருப்போம். நம்மேல் இறைவனின் அருள் வெள்ளம் பாய்வது மேட்டுமடையாகவே இருக்கும். ஆனால் ஆய்ச்சியர்களோ, உண்மையில் தாழ்ச்சி உடையவர்களாகவும், தாழ்ச்சி தோற்றப் பேசுபவர்களாகவும் இருத்தலின், அவர்கள்பால் இறையருள் வெள்ளம் பாய்வது, பள்ள மடையாக இருக்குமென்று அவர்கள் பக்கமாக நின்றேன் என்று கூறினார். அதனைக் கேட்ட முதலியாண்டான், ''அற்றேல் ஆய்ச்சிகள் சொன்னதென்? தேவரீர் அருளிச் செய்ததென்?'' என்று வினவினார். ''ஆய்ச்சிகள் நூறு வயது இருப்பீர். அழகிய இரட்டை உடுப்பீர். பொன்னால் பூணூல் இடுவீர்'' எனப் பெருமாளை நோக்கிக் கூறினார். அடியேன் ஜயஜய விஜயஸ்வ விஜயீபவ என்பன போல்வனவற்றைக் கூறினேன்'' என்றார். அதற்கு ஆண்டான், ''அங்குப் போயும் நீர் முரட்டு சம்ஸ்கிருதம் விட்டீரில்லை; எங்கே இருந்தாலும் நாம் நாமே; இங்கே எழுந்தருளி இரீர்'' என்று அருளிச் செய்தார் என்பது, ஈட்டுரையில் குறிப்பிடப்பெற்றுள்ளது. இதனால், முதலியாண்டான் தமிழ்மொழியின் மெய்ம்மையினையும், இனிமையினையும், எளிய இயல்பான உருக்கத் திறனையும் செவ்விதிற் றெளிந்து ஈடுபட்டிருந்தார் எனத் தெரிகின்றது.

**தாயுமானவர் :**

*(20)* வேதாந்த சித்தாந்த சமரச ஞான வித்தகர் ஆகிய தாயுமானவ சுவாமிகள், சிவபெருமான் தம் திருச் செவிகளில் ''மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர்சொலும் தமிழ்'' கேட்டு மகிழ்வதனைப் போற்றி மகிழ்வதுடன், ''வடமொழியில் வல்லான் ஒருத்தன் வரவும் திராவிடத்தில் வந்ததா விவகரிப்பேன்; வல்ல தமிழறிஞர் வரின் அங்ஙனே வடமொழியின் வசனங்கள் சிறிது புகல்வேன்'' எனவரும் தமது பாடற்பகுதியில், தமிழ் கற்ற ஒருவரிடத்தில் தமக்குள்ள பேரன்பையும் பெருமதிப்பையும் புலப்படுத்தியிருக்கக் காண்கின்றோம். 'வடமொழியில் வல்லான் ஒருத்தன்' என எள்ளக் குறிப்பு அமைய ஒருமையிலும், 'வல்ல தமிழறிஞர்' என அன்பும் மதிப்பும் புலப்படப் பன்மையிலும், தாயுமானவர் அருளிச் செய்திருப்பது, கருதியுணர்தற்குரியது.

**குமரகுருபரர் :**

*(21)* செந்தில் முருகன் திருவருள் பெற்றுச் சிறந்து திகழ்ந்திருந்த குமரகுருபரர், அம்முருகன்பால் ''ஆசுமுதல் நாற்கவியும், அட்டாவதானமும், சீர்ப்பேசும் இயற் பல்காப்பியத் தொகையும், ஓசை எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப் புலமை பாலித்து'' அருளுமாறு வேண்டியிருத்தல், அவர்தம் அளப்பரிய தமிழ் அன்பையும் ஆர்வத்தையும் அறிவிக்கும். மேலும் அவர், தாம் பாடியருளிய மதுரைக் கலம்பகம் என்னும் நூலில், ''தமிழின் எல்லையற்ற இனிமையினைக் கொள்ளை கொண்டு உண்டு மகிழும் விருப்பத்தினாலேயே, சிவபெருமான் மதுரை நகரில் சவுந்தரபாண்டியன் என்றும், உமா தேவியார் தடாதகைப் பிராட்டி என்றும், முருகப்பெருமான் உக்கிரப் பெருவழுதி என்றும் தோன்றியருளி, ஒரு பெருங் குடும்பமாகத் தங்கி வாழ முற்படுவாராயினர்'' என்னும் கருத்து அமையுமாறு,

''தமரநீர்ப் புவனம் முழுதொருங்கு ஈன்றாள்
தடாதகா தேவி என்றொரு பேர்
தரிக்க வந்ததுவும்; தனிமுதல் ஒருநீ
சவுந்தர மாறன் ஆனதுவும்;
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
கொண்டதும்; தண்டமிழ் மதுரம்
கூட்டுண எழுந்த வேட்கையால் எனில், இக்
கொழிதமிழ்ப் பெருமை, யார் அறிவார்?"

எனப் பாடியருளி யிருத்தலும், நாம் பல்காற் பயின்றுணர்ந்து மகிழ்தற்குரியது.

**சிவஞானயோகிகள் :**

(22) மாபெருந் தமிழ்ச் சைவச் சான்றோர் ஆகிய மாதவச் சிவஞான யோகிகள், தாம் இயற்றியருளிய தொல்காப்பியச் சூத்திர விருத்தியின்கண், ''தமிழ்மொழிப் புணர்ச்சிக் கட்படும் செய்கைகளும், குறியீடுகளும், வினைக் குறிப்பு, வினைத் தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுள் இலக்கணமும் இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படா'' என்று விளக்கியிருத்தலும், இங்கு நாம் உணர்ந்து இன்புறற்பாலது.

**பரஞ்சோதி முனிவர் :**

(23) திருவிளையாடற்புராணம் இயற்றிய பரஞ்சோதி முனிவர், ''கூத்தப் பெருமான் தெற்கு நோக்கித் தன் திருநடனத்தைச் செய்தல், தென்றற்காற்றின் மென்மையினையும், செந்தமிழ் மொழியின் இன்பத்தினையும் நுகர்தற் பொருட்டே யாகும். தமிழின்பால் சிவபிரானுக்குள்ள ஈடுபாடு எல்லையற்றது. அதனாலேயே அப்பெருமான் சங்கப் புலவர்களுடன் கூடித் தமிழினை ஆராய்ந்து மகிழ்ந்தான்; இறையனார் என்னும் பெயர்கொண்டு, சங்கப் புலவர்களின் தலைவராக விளங்கி, சிவபெருமானே ஆராய்ந்து இன்புற்றதும், இலக்கணச் சிறப்பு வளம் மிக்கதும் ஆகிய தமிழ்மொழிக்கு, இலக்கண வரம்பில்லாத ஏனைய பிற சில மொழிகள் எவ்வாற்றாலேனும் ஈடாகுமோ? இறைவனைத் தூது போகச் செய்ததும், முதலையுண்ட பாலனை உயிர் பெற்று வருமாறு அழைத்ததும், என்பைப் பெண்ணுருவாக்கி உயிர்ப்பித்ததும், மறைகள் மூடிச் சென்ற கதவினை மீளத் திறப்பித்ததும், கன்னித் தமிழ் மொழியே அன்றோ? இத்தகைய அரும்பெறற் செயல்களை அயல் மொழிகள் எவையேனும் எங்கேனும் ஆற்றியதுண்டோ?'' என்றெல்லாம் தமிழ் மொழியின் சிறப்பினைத் தகவுறப் புகழ்ந்து பாடிப் போற்றியருள்கின்றார்.

கண்ணு தற்பெருங் கடவுளும்
கழகமோடு அமர்ந்து,
பண்ணு றத்தெரிந்து ஆய்ந்தஇப்
பசுந்தமிழ், ஏனை
மண்ணி டைச்சில இலக்கண
வரம்பிலா மொழிபோல்
எண்ணி டப்படக் கிடந்ததா
எண்ணவும் படுமோ?

தொண்டர் நாதனைத் தூதிடை
விடுத்ததும், முதலை
உண்ட பாலனை அழைத்ததும்,
என்புபெண் ணுருவாக்
கண்டதும், மறைக் கதவினைத்
திறந்ததும், கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ? மறுபுலச்
சொற்களோ? சாற்றீர்!

—திருவிளையாடற் புராணம்.

**இராமலிங்க அடிகளார் :**

(24) செந்தண்மை என்னும் சீவகாருணியக் கொள்கையினைக் கடைப் பிடித்துச் சத்திய சமரச சுத்த சன்மார்க்க நெறியினைப் பரப்பியருளிய திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க அடிகள், ''முதலையுண்ட மதலையை மீட்டு உயிர்த்தெழச் செய்த தமிழ்க் கலைக்கும், வட கலைக்கும் இடையேயுள்ள இயல்பு வேறுபாடு, பொன்மலைக்கும் அணு நிலைக்கும் இடையேயிருப்பது போன்றது'' என்னும் கருத்தமைய,

''இலைக்குளநீர் அழைத்ததனில்
இடங்கர்உற அழைத்து, அதன்வாய்த்
தலைக்குதலை மதலைஉயிர்
தழைப்ப அழைத் தருளியநின்
கலைக்கும், வட கலையின்முதற்
கலைக்கும்உறு கணக்கு, உயர்பொன்
மலைக்கும், அணு நிலைக்கும் உறா
வன்றொண்டப் பெருந்தகையே''

என அருளிச் செய்திருத்தல், சிந்தித்து அறிதற் குரியது. இது மட்டுமோ! இறைவன்பால் தாம் செய்து கொண்ட சத்தியப் பெருவிண்ணப்பம் என்னும் வேண்டுகோளில்,

''இடம்பத்தையும், ஆரவாரத்தையும், பிரயாசத்தையும், பெருமறைப்பையும், போதுபோக்கையும் உண்டுபண்ணுகின்ற ஆரியம் முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்ல ஒட்டாது-பயிலுதற்கும் அறிதற்கும் மிகவும் எளிமையுடையதாய், பாடுதற்கும் துதித்தற்கும் மிகவும் இனிமையுடையதாய், சாகாக் கல்வியை எளிதில் அறிவிப்பதாய்த், திருவருள் வலத்தாற் கிடைத்த தென்மொழி ஒன்றனிடத்தே என்மனம் பற்றச் செய்து, அத் தென்மொழியாற் பலவகைத் தோத்திரப் பாட்டுக்களைப் பாடுவித் தருளினீர்''

என்று எழுதியிருப்பனவும், இங்கு நாம் பெரிதும் ஆழ்ந்து ஆராய்ந்து அறிந்து கொளற்பாலது.

**தண்டபாணி சுவாமிகள் :**

(25) பல ஆயிரம் பாடல்களைப் பாடியிருப்பவரும், புலவர் புராணம் இயற்றியவரும், முருகன் அருள்பெற்ற பெருமுனிவரும் ஆகிய திருப்புகழ்த் தண்டபாணி சுவாமிகள், தமிழ் மொழியினை இகழ்ந்து பழித்த ஒருவரை மறுத்துத், தமிழின் தனிப்பெரு மாட்சிமைகளும் தெய்விக நலங்களும் விளங்கப் பாடியருளிய **தமிழலங்காரம்** என்னும் அழகிய அரும் பெறற் கவிதைநூலில், அவ்வருட்பெருஞ் சான்றோர் தமிழின்பாற் கொண்டிருந்த ஆர்வமும் பற்றும், பக்தியும் தெற்றெனப் புலனாகும். நச்சினார்க்கினியர் (தொல். செய்.117), தமது தொல்காப்பியப் பொருளதிகாரவுரையில் ''ஆரியம் நன்று; தமிழ் தீது'' என்றுரைத்தான் ஒருவனை, நக்கீரர் சாவவும் வாழவும் பாடிய செய்தியினைக் குறிப்பிட்டிருத்தலும், இங்கு நாம் உணர்தற்குரியது.

**முடிவுரை :**

இங்ஙனம் தொன்று தொட்டு வாழையடி வாழையாகத் தோன்றியருளிய சான்றோர்கள் அனைவரும், ஒருங்கினிது உளமுவந்து புகழ்ந்து போற்றியுள்ள செந்தமிழ் மொழியின் தெய்விக நலங்களையுணர்ந்து, நாம் அனைவரும்அதனை ஏற்றபெற்றி போற்றி, நலம்பலவும் எய்தி உய்ய முயலுவோமாக!

# குடம்பையும் புள்ளும்

'முத்தமிழ்க் காவலர்'

திரு கி. ஆ. பெ. விசுவநாதம், திருச்சி

''குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு''

என்பது திருக்குறளில் ஒரு குறள். இது கொல்லாமைக்குப் பின்னும் துறவுக்கு முன்னும் கூறியுள்ள ''நிலையாமை'' என்ற தலைப்பில் உள்ள ஒன்று.

நிலையாமையைப் பற்றிக் கூறவந்த வள்ளுவர், ''நிலையில்லாதவைகளை நிலைத்து நிற்பவை என்று எண்ணி வாழும் வாழ்வு ஒரு இழிந்த வாழ்வு'' என்று எடுத்த எடுப்பில் கூறியிருக்கிறார். அடுத்து 'நெருநல்', 'நாச்செற்று' 'நாளென', 'ஒருபொழுதும்' 'கூத்தாட்டு' என்று தொடங்கும் குறள்களின் மூலம் உலகம் நிலையாது, வாழ்வு நிலையாது, உயிர்நிலையாது, பொழுது நிலையாது, செல்வம் நிலையாது' என்று கூறிப் பின் இக்குறள் மூலமும் நட்பு நிலையாது என்று கூறுகின்றார். இது வியப்பிற்குரியது.

உற்றார் உறவினர் மனைவி மக்கள் போன்ற எவரையும் நாம் ஒன்றாகவே கருதி ஒருமையிலேயே அழைக்கிறோம். ஆனால் அவர்கள் ஒவ்வொருவரையும் உடலொன்றும் உயிரொன்றும் ஆக இரண்டு எனக் கருதும்படி செய்கிறது இக்குறள். இருகூறுபட்ட உடலும் உயிரும் மாறுபட்டும், வேறுபட்டும் தோன்றாமல், ஒன்றுபட்டுத் தோன்றுகின்ற இந்நிலையை வள்ளுவர் ''நட்பு'' என்று இக்குறளில் குறிப்பிடுவது மிகுந்த பொருளமைதியுடையதாகும்.

உயிர் வருந்தினால் உடல் இளைத்துவிடுகிறது. உடலில் ஊசி குத்தினால் உயிர் துடிக்கிறது. என்ன உடம்போடு உயிரிடை நட்பு! என்று எண்ணிப் பார்க்கச் செய்கிறது இக்குறள். உடல் தோன்றும்போதே உயிரும் தோன்றி, உயிர் பிரிந்தபோதே உடலும் அழியத் தொடங்குவதைக் காணும்பொழுது, 'நட்பு' என்பது இம்முறையில்தான் இருக்க வேண்டும் என்று இக்குறள் கூறாமற் கூறுவதாகத் தோன்றுகிறது.

'நட்பு' என்ற தலைப்பிலும் கூறப்பட்டிராத இந்த உயர்ந்த கருத்தை 'நிலையாமை' என்ற தலைப்பில் வைத்துக் கூறியிருப்பதைக் காணும்பொழுது, இது நட்பை விளக்க வந்ததா? நிலையாமையை விளக்க வந்ததா? என்ற ஐயம் தோன்றுகிறது. எனினும் இவ்விரண்டையுமே விளக்க வந்தது என்று கொள்வது தவறாகாது.

''உடலைத் தனித்துவிட்டு உயிர் ஓடிப் போய்விடும்'' என்று மட்டும் கூறினாற் போதாது என எண்ணி, வள்ளுவர் அதற்கொரு உவமையையும் தேடிப்பிடித்து இக்குறளிற் புகுத்தியுள்ளார். அது ''குடம்பை தனித்து ஒழிய, பறவை பறந்து போவது போல'' என்பதே. ''குடம்பை'' என்ற சொல்லுக்குக் கூண்டு என்றும், முட்டை என்றும் பொருள் கூறலாம். இவற்றில் வள்ளுவர் எடுத்துக் காட்டியது கூண்டையா? முட்டையையா? என்று இக்குறள் நமக்கு ஒரு ஐயப்பாட்டை உண்டாக்குகிறது.

'ஒழிய' என்ற சொல் இக்குறளிலிருந்து அழிவைக் குறிப்பிடுவதால், பறவை வெளிப்பட்டதும் கூண்டு அழியாமையாலும், முட்டை அழிந்துபடுவதாலும் 'குடம்பை' என்பது முட்டையையே குறிக்கும் எனக் கருத இடம் ஏற்படுகிறது.

'புட்பறந்தற்றே' என்ற சொற்றொடரை நோக்கும்போது முட்டையை விட்டு வெளிவந்த எதுவும் உடனே பறப்பதில்லை; ஆதலின் கூண்டு என்றே கொள்ள வேண்டியிருக்கிறது.

கூண்டை விட்டுப் பறந்த பறவை மீண்டும் கூண்டுக்குள் வந்து புகுவதாலும், கூண்டு பறவையோடு உடன்பிறந்ததல்ல ஆதலாலும், உடலை விட்டுப் பிரிந்த உயிர் மீண்டும் அவ்உடலில் வந்து புகாமைபோல முட்டையை விட்டு வெளிவந்த எதுவும் மீண்டும் முட்டைக்குள் சென்று புகுவதில்லை ஆதலாலும், முட்டை என்று பொருள் கொள்வதே நலம் எனத் தோற்றுகிறது.

முட்டையைவிட்டு வெளிவரும் எதுவும் 'குஞ்சு' என்றே பெயர் பெறுவதாலும், கூண்டைவிட்டுப் பறந்து செல்வதே புள் எனப்படும் ஆதலாலும், இக்குறளில் உள்ள 'குடம்பை என்ற சொல் கூண்டையே குறிக்கும் எனக் கூற வேண்டியிருக்கிறது.

கூண்டா? முட்டையா? என்ற ஐயப்பாட்டில் மேலும் இறங்காமல், குடம்பை என்ற

சொல்லுக்கு ''கூடு'' என்று பொருள் கொள்வதே நலமாகவிருக்கும். எவ்விதமெனில் அது பறவையின் கூட்டிற்கும், முட்டையின் கூடுக்கும், மக்களின் உடலுக்கும் ஏற்ற ஒரு சொல் என்பதாலேயாம். என்றோ ஒரு நாளில், எப்போதோ ஒரு பொழுதில் கூடுவிட்டுப் புள் வெளிப்பட்டு விடுதல் போல, உடலை விட்டு உயிர் ஓடிப் போய்விடும் என்று எச்சரிக்கை செய்கிறது இக்குறள்.

ஒன்றாகத் தோன்றி, ஒன்றாக வாழ்ந்து, ஒன்றாக மகிழ்ந்து, ஒன்றாக வருந்தி, ஒன்றாக அழிகின்ற உடலுயிரின் இத்தகைய உயர்ந்த நட்பே நிலைத்து நில்லாது என்றால், வேறு எவருடைய நட்பு நிலைத்திருக்கப் போகிறது? என்று இக்குறள் நம்மை எண்ணிப் பார்க்கும் படி தூண்டிக் கொண்டிருக்கிறது.

உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பை வள்ளுவர் விளக்கும் முறையும், அவர் கையாண்ட உவமையும் மிகமிக உயர்வானதாகும். இது போன்றதொரு கருத்தை உலகின் எப்பகுதியிலும், எம்மொழியிலும் எப்புலவனும் இன்றைக்கும் கூறவில்லை என்பதை எண்ணும் போது நமது உள்ளம் பெரு மகிழ்ச்சியடைகிறது.

தம்பி! நீ ஒன்று அல்ல; மூன்று! உடல் ஒன்று; உயிர் இரண்டு; நீ மூன்று. பறவை ஒன்று, கூடு இரண்டு; பார்க்கின்ற நீ மூன்று. உடலும் உயிரும் உள்ளவரையில்தான் நீயும் இருப்பாய்; அவை இரண்டும் உனக்குக் கட்டுப் பட்டது மல்ல; அதன் நட்பும் நீடித்ததல்ல. ஆதலின் உனது நிலையும் நீடித்ததல்ல. ஆகவே அதற்குள் நீ நல்லதை எண்ணு! நல்லதைச் சொல்! நல்லதைச் செய். இவைகளைச் செய்ய உன்னால் இயலாது என்று தோன்றினால், தீமையையேனும் எண்ணாதே! சொல்லாதே! செய்யாதே! இது உன்னால் முடியும்! முடியக் கூடிய எதையும் உடனே செய்! காலந் தாழ்த் தாதே! ஏனெனில்,

''குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு''

குறளை எடு, படி, எண்ணு, உணர், செய். அது உன் நல்வாழ்வுக்கு ஏற்ற வழியைக் காட்டும் ஒரு கைகாட்டி! வளரட்டும் தமிழர் நெறி!



## நரகன்றோ இந்திரன்தன் நாடு ?

பெருமாள் தம் வலக்கரத்தில் சுதர்சனம் என்னும் சக்கரத்தையும், இடக்கையில் பாஞ்சசந்யம் என்னும் சங்கையும், ஏந்தியிருக்கின்றார். அஃது, அழகராகிய பெருமாளுக்கு மேலும் அழகை விளைவிக்கின்றது. அவ்வழகில் ஈடுபட்டு, அச்சுந்தரன்பால் தம் சிந்தையைப் பறிகொடுத்துப் பக்தி வயப்பட்டு அடிமைத் தொழில் பூண்ட பாகவதர்கள், அவ்வடிமைத்திறத்திற்கு வேறான எதிலும் ஆதரம் கொள்ளமாட்டார்கள். மீட்சியற்றதாய், ஒப்பற்றதாய், அருமையுடையதாய் விளங்கும் திருநாட்டிலே பேரின்பம் அநுபவிக்கக் குதூகலம் உடையவர்களுக்கு, சுவர்க்கலோக இன்பமும் நரகலோகத் துன்பமாகவே தோன்றும் அன்றோ?

தோளார், சுடர்த்திகிரி சங்குடைய சுந்தரனுக்கு
ஆளானார், மற்றொன்றில் அன்புசெய்யார்:—மீளாப்
பொருவரிய விண்ணாட்டிற் போகம்நுகர் வார்க்கு,
நரகன்றோ இந்திரன்தன் நாடு?

—ஞானசாரம்.

[திகிரி—சக்கரம். சுந்தரன்—அழகிய திருமேனியையுடைய பெருமாள். பொரு அரிய—ஒப்பற்ற. விண்ணாடு-வைகுந்த உலகம், திருநாடு.]

—ஆசிரியர்.

கர்நாடக சங்கீதத்தின்

# ஆதி சங்கீத மும்மூர்த்திகள்

''இலக்கிய ஆராய்ச்சிப் பேரறிஞர்''
திரு மு. அருணாசலம் அவர்கள்

ஒரு குறிப்பைச் சொல்லி அருணாசலக் கவிராயர் பற்றிய இத்தலைப்பை முடிக்கலாம். இந்த நூற்றாண்டின் தொடக்கப் பகுதி வரையில் மங்களம் பாடியபோது இராம நாடகக் கீர்த்தனையில் வரும் மங்களத்தைத்தான் எல்லோரும் பாடுவார்கள்.

பல்லவி.

ஸ்ரீராமச் சந்திரனுக்கு ஜயமங்களம்-நல்ல
திவ்விய முகச் சந்திரனுக்கு சுபமங்களம். (ஸ்ரீ)

அநுபல்லவி

மாராமபிரானுக்கு மன்னுபரந்தாமனுக்கு
ஈராறு நாமனுக்கு இரவிகுல சோமனுக்கு (ஸ்ரீ)

சரணம்

கொண்டல் மணி வண்ணனுக்கு மங்களம்
கோசலை குமாரனுக்கு வீரனுக்கு மங்களம்
புண்டரிகத் தாளனுக்குப்
பூச்சக்கிர ஆளனுக்குத்
தண்டுளவத் தோளனுக்குச்
சானகிம ணாளனுக்கு (ஸ்ரீ)

ஆனால் இந்த நூற்றாண்டின் இரண்டாவது கால் கூற்றிலிருந்து மேளக்காரர் அல்லாத பிற சங்கீத வித்வான்கள் இசைக் கச்சேரிகள் செய்யத்தொடங்கிய போது அவர்கள் கீர்த்தனங்களில் தமிழ் மொழியைக் கைவிட்டுத் தெலுங்குப் பாடல்களையே மேற்கொண்ட நிலையில் மங்களம் பாடிய போதும் தெலுங்குப் பாடலையே தேடிக்கொண்டார்கள். ஸ்ரீராமச் சந்திரனுக்கு ஜயமங்களம் என்பது போய் 'நீநாம ரூபமுலகு நித்யஜய மங்களம்' என்ற தெலுங்குப் பாடல் மங்கள கீர்த்தனமாக அமைந்தது. அதுவும் இக்காலத்தில் பாடகர் மங்களத்தில் பல்லவியை விட்டு. 'பவமான சுதகு பட்டு பாதார விந்த முலகு' என்று அநுபல்லவியில் தொடங்கி, பாடி முடிக்கிறார். இவ்வாறு கவிராயருடைய மங்களம் வழக்கத்தில் இல்லாமல் மறைந்து போனதற்கு ஒரே காரணம், சங்கீதம் பரம்பரை இசைவாணராகிய மேளக்காரரை விட்டுப் புதிதாகக் கற்றுக்கொண்டு பாடுகிறவர் கைக்கு மாறியபோது மரபு போய்விட்டது. இவர்கள் பழம்பாடல்களைக் கைவிட்டுத் தியாகையர் பாடல்களைக் கைக் கொண்டார்கள். கொண்டபோது தமிழை விட்டுத் தெலுங்கைப் பிடித்தார்கள். அந்த நிலையில் தமிழ் மங்களமும் மறைந்து போயிற்று. மேலும் புதிதாய்க் கற்ற இவ்வித்துவான்கள் ஒரு புதிய பரம்பரையை வளர்த்தபோது தியாகையர் பாடலையே பாடவேண்டுமென்ற கருத்து பிரசாரமெய்திற்று. அந்த நிலையில் 'ஸ்ரீ ராமச் சந்திரனுக்கு ஜய மங்களம்' என்ற மங்களப் பாடலும் அதுபோன்ற பிறவும் மெல்லக் கை நழுவி விட்டன.

**பதிப்புக்கள் :**

இராம நாடகக் கீர்த்தனை பழமையாகச் சில பதிப்புகள் அச்சாகின. ஆனால் எப்படியோ இந்த நூலும், நந்தனார் சரித்திரக் கீர்த்தனையும், யாப்பருங்கலம், தொல்காப்பியம் முதலியவற்றைப் பதிப்பித்த திவான்பகதூர் பவானந்தம்பிள்ளை கண்ணில் பட்டு அவர் இவற்றைக் கீர்த்தனைக் கொத்து மலர் 1, மலர் 2 என்று அழகாக அச்சிட்டார். 11 அழகான ஐதிகப் படங்களையும் சேர்த்தார். இனி ஒரு காலத்திலும் இந்த நூலுக்கு இவ்வளவு அழகான பதிப்பு வரமுடியாது என்று சொல்லத் தக்க முறையில் இந்த நூல் 1914ல் அச்சிடப் பட்டது.

இதனுள் உதவிச் சிறப்பு என்று உதவி செய்தார் மூவர் பேரில், இந்நூலாசிரியர் பாடியது என்று மூன்று கீர்த்தனங்கள் அச்சிடப் பட்டுள்ளன. முதலாவது புன்னாகவராளி ஆதி தாளம் சிற்றேரி என்னும் ஊரில் வாழ்ந்த முத்து முதலியார் புதல்வர் சிற்றேரி அருணகிரி முதலியார் என்பவர். குலோதிங்போர்டில் வேலை பார்த்தவர். அருணாசலக் கவிராயர் சொல்லிய இராம நாடகத்தை மதித்துப் புலவர்களால் சோதித்து இசை தாளங்கள் முன்னிலும் பாங்காக அமைத்து சரஸ்வதி அச்சகத்தில் அச்சுப் பதிப்பித்தார் என்று சொல்லப்படுகிறது.

இரண்டாவது கீர்த்தனை, கியால்மெட்டு, பைரவி ராகம், அடதாளச் சாப்பு சென்னையில் அக்கௌண்டன்டு ஜெனரல் ஆபீசில் உயர்ந்த உத்தியோகம் வகித்தவரும், வீராசாமி பிள்ளை புதல்வரும் ஆன வெங்கடசுப்பராய பிள்ளையைப் புகழ்வது.

மூன்றாவது அக்கம்மாள் பேட்டை சய முத்து வேங்கடாசலச் செட்டியார் குமாரர் வேங்கடாசலச் செட்டியாரைப் புகழ்வது. தோடி ராகம் ஆதி தாளம். பவணந்தி சீயகங்கனை நன்னூலில் புகழ்வது, அருணகிரிநாதர் திருப்புகழில் பிரபுட தேவராயனைப் புகழ்வது, வில்லிபுத்தூரர் பாரதத்தில் வக்கபாகைக் கொங்கராயனைப் புகழ்வது, கம்பர் இராமாயணத்தில் வெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளலைப் புகழ்வது, செல்வநம்பி பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டில் அமர்ந்திருப்பது, எங்கும் நிறைந்த மாயவன் கூட மங்கையர் கோனுக்குச் சகாயம் புரிந்து அவனது திருமொழியில் வாழ்ந்திருப்பது என்றெல்லாம் குறிப்பிடுகிறார். இவை மூன்று கீர்த்தனங்

களும் இந்நூலாசிரியர் பாடியவை என்ற குறிப்பு இருந்தபோதிலும், இவை சரஸ்வதி அச்சகத்தில் அச்சிட்ட பதிப்புக்கு உரியனவே அன்றி இராம நாடகத்துக்கு உரியன அல்ல என்று கருதவேண்டும். இவற்றைக் கவிராயர் பாடவில்லை.

**இராமயண ஓரடிக் கீர்த்தனை :**

பண்டைக் காலத்தில் இராமாயணக் கதை முழுவதையும் சுருக்கி ஒரே பாடலாலும் அல்லது இரண்டொரு பாடல்களாலும் பாடுவது ஒரு பொழுது போக்காக இருந்திருக்கிறது. பலர் இவ்வாறு பாடியிருக்கிறார்கள். வியாக்கியானச் சக்கரவர்த்தியாகிய பெரியவாச்சான் பிள்ளை, ஆழ்வார் பாசுரங்களிலிருந்து தொடர்களைத் திரட்டி அவற்றைக் கதைக்கேற்றபடி முறையாகத் தொகுத்துப் பாசுரப்படி இராமாயணம் அமைத்தார் என்பதை நாம் அறிவோம். இந்த முயற்சியில் கவிராயரும் ஈடுபட்டிருக்கிறார். இராம நாடகத்தின் பாயிரத்தில் உள்ள இராமர் தோத்திரப் பாடலாகிய ''எனக்குன் இருபதம் நினைக்க அருள்புரிவாய்'' என்ற சௌராஷ்டிர ராகப் பாடல் (திரிபுடை தாளம்) எல்லோரும் மிகவும் நன்கு அறிந்தது. இது ஒரு பல்லவியும் ஒன்பது சரணங்களும் கொண்டது. அநுபல்லவி இல்லை. தசரதனுக்கு மகனாக இராமன் பிறந்தது முதல் இராவணனை வதைத்துப் புஷ்பக விமானத்தில் ஏறி வந்து அயோத்தியில் இராமன் பட்டாபிஷேகம் செய்து கொண்டது வரையில் இராம சரிதைச் செய்திகள் ஒன்றும் விடாமல் இத்தரு உரைக்கிறது. இதை மனப்பாடம் செய்து வைத்திருந்தால் இராம கதை ஒன்றுவிடாமல் நன்றாகச் சொல்லிவிட முடியும். சரணங்கள் முழுமையும் சந்தத்தில் உள்ளன.

இதுபோல இவரே இராமாயண ஓரடிக் கீர்த்தனையொன்று பாடியிருக்கிறார். இது தோடி ஆதி தாளத்தில் ''கோதண்ட தீட்சா குருவே பக்தர் இதய கோகனமலர் மருவே'' என்ற பல்லவியுடன் தொடங்கி நீண்ட அநுபல்லவியோடு 242 அடிகொண்ட ஒரே சரணத்தால் இராமகதையைச் சுருக்கிச் சொல்கிறது. ஒருகால் கவிராயர் கம்பராமாயணத்தின் சுருக்கமாக அமைத்துக்கொண்டு பின்னர் இதை விரித்து இராம நாடகத்தைக் கீர்த்தனையாக ஆக்கியிருக்கலாம் என்று தெரிகிறது.

**பிற கீர்த்தனங்கள் :**

அருணாசலக் கவிராயர் சிறந்த சைவர். அவர் இராம நாடகக் கீர்த்தனம் செய்த காரணம், அவர் காலத்தில் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் மகாராட்டிரப் பாணியில் காலட்சேபங்கள் நடந்து வந்தமையும் அவருக்குக் கம்பராமாயணத்தில் இருந்த சிறப்பான ஈடுபாடுமாகும். காலட்சேபத்துக்குரிய இசை, இயல் இரண்டும் தழுவிய நூல்கள் அக்காலத்தில் இல்லை. ஆகவே கவிராயர் அப்படிப்பட்ட ஒரு நூல் செய்ய உறுதிபூண்டார். அதற்கு ஏற்ற கதையாகக் கம்பருடைய இராம கதையைத் தேர்ந்தெடுத்தார். இசையில் அவருக்கு மேற்கூறிய அந்தணர்கள் உதவினர். இராம நாடகக் கீர்த்தனை உருவாயிற்று. ஆனால் இவர் சிறந்த சைவர். கதைக்கு ஏற்றது என்று இராம கதையைத் தேர்ந்தெடுத்தார். சிவ பக்தி நிறைந்த இவரது உள்ளம் முதலில் கீர்த்தனம் செய்யும்முன் வழிபடு கடவுள் வணக்கமாக ''ஆனைமுகனே அரனார் திருமகனே-சேனையர் கோனாக வளம் செய்தோனே'' என்று இவர் விநாயகரை வணங்கித் தொடங்குகிறார். இங்கு விநாயகரையும் வைணவர் வணங்குகின்ற சேனை முதலியாரினையும் இராம கதைக்குப் பொருந்த ஒற்றுமைப் படுத்தி இவர் பாடுகின்ற நயம் இன்புறத்தக்கது. அடுத்த கீர்த்தனம் விநாயகர் வணக்கமாக இவர் பாடுகிறார்.

தனித் தெய்வ வணக்கமாக இருந்தால் அப்போது இசைப் பாடல் கீர்த்தனம் என்று பெயர்பெறும். அப்படியின்றி ஒரு கதையின் பகுதியை எடுத்துச் சொல்லும்போது அதே கீர்த்தனம் தரு என்று சொல்லப் பெறுகிறது.

இங்கு விநாயகர் வணக்கம் தரு என்று அச்சிடப்பட்டுள்ளது. சௌராஷ்டிர ராகம் ஆதி தாளத்தில் இத்தரு அமைந்துள்ளது. இது பல்லவி அநுபல்லவி மூன்று சரணங்கள் என்ற அமைப்புடையது. இந்த விநாயகர் தோத்திரத்தில் பல்லவியும் ஒரு சரணமும் பின் வருவன:

விநாயகா சரணம் - ஜயஜய
விநாயகா சரணம் (விநா)
அநாதரட்சகனே - கஜமுகனே
ஐங்கரனே சிவசங்கரன் மகனே (விநா)
அன்பிலாத பேயேன் என்னுடைய
அறிவு விளங்கவே துணை வருவாயே
என் குல தெய்வம் நீயே இந்த
ராம நாடகத்துக் கனுக்கிரகிப்பாயே (விநா)

இவ்வாறு இவர் விநாயக வணக்கம் சொல்லியிருப்பதோடன்றி வேறு சிவ பரமாகப் பல தனிக் கீர்த்தனங்களும் பாடியிருக்கிறார். அவற்றுட் சிலவற்றைக் கீழே குறிப்பிடுவோம்.

மயிலைச் சிங்கார வேலவர் மீது அருணாசலக் கவிராயர் நான்கு கீர்த்தனங்களும் பதங்களும் பாடியிருக்கிறார். இவர் இராமாயணப் பிரசங்கத்துக்காகச் சென்னை வந்து மணலி முத்துக்கிருஷ்ண முதலியார் ஆதரவு பெற்று இராம நாடகப் பிரசங்கம் செய்த காலம் இவருடைய இசைப் புலமையை உணர்ந்து தூண்டப்பெற்று இக்கீர்த்தனங்கள் பாடினார் ஆகலாம். முதலாவது சாவேரி, ஆதி தாளம்.

ஆயிரம் கண்கள் வேணும்-மயிலாபுரி
ஆறுமுகச் சிங்கார வேலவரைக் காண (ஆயிரம்)

என்பது அதன் பல்லவி. அநுபல்லவிக்குப் பின் வருகின்ற முதற் சரணம் பின்வருவது:

மருவு தெய்வானையோடு ஒரு
குறமின்றாளும் - மன்மதவேளும்
வழிபடுமழ கொழுகிய
பன்னிருதோளும் - கண்டெந்த நாளும்
கரையும் - அன்பர் நிறையும் -பொன்னூல்
அரையும் முகத்தாமரையும் மேனியில்
வருணமும் -கிரணமும் - திருவாபரணமும்
சரணமும் - மூவிரு
சிரமும் கரமும் திருசுந்தரமும்
தரித்த நூலும் - திருக்கைவேலும் தரிசிக்க
(ஆயிரம்)

இரண்டாவது சிங்கார வேலவர் பதம், சாவேரி ஆதி தாளம்.

# இறை வணக்கமும் விஞ்ஞானமும்

திரு. டாக்டர் மெ. மெய்யப்பன், M.Sc., Ph.D., F.I.C.S.,
சரபோஜி அரசர் அரசினர் கல்லூரி, தஞ்சை.

நாட்டை ஆளலாம்; உலகத்தையே ஒரு குடையின் கீழ் ஆளலாம்; சூரிய மண்டலத்தையே ஆளலாம்; இந்தப் பால்வெளியைக்கூட ஆளலாம். கோடானுகோடி ஒளி ஆண்டுகளுக்கு அப்பாலும் விரிந்துள்ள பிரபஞ்ச வெளியை ஆளமுடியுமா? யாராலும் முடியாது. மனிதர்களால் இயலவே இயலாது. எல்லைகள் அற்ற இப்பேரண்ட வெளியில் எண்ணிலா நட்சத்திரங்களும், கிரகங்களும் மிக வேகமாக இயங்கிக் கொண்டிருக்கின்றனவே? அவைகள் எப்படித் தோன்றின? ஏன் தோன்றின? அவைகள் எப்பொழுது அழிவுறும்? அழிவிற்குப் பிறகு அண்டவெளியில் மீண்டும் ஆக்கம் உண்டா? அவைகள் எப்படி ஒன்றோடொன்று மோதாமல் நீண்ட காலத்திற்குச் சீரான இயக்கத்தைப் பெற்றிருக்கின்றன? நியூட்டனின் ஈர்ப்பு விதிகளுக்கு உட்பட்டு அவைகள் இப்பிரபஞ்ச வெளியில் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன என்று விஞ்ஞான அறிவு கூறினாலும் அதனால் ஏன், என்ன போன்ற கேள்விகளுக்கு மட்டும் பதிலே கொடுக்க முடியவில்லை. இதற்கு எவ்வளவோ எடுத்துக்காட்டு கூறலாம். ஒரு பருப்பொருள் மற்றொரு பருப்பொருளை ஏன் கவர்ந்திழுக்க வேண்டும்? ஆற்றல் மிக்க கதிர்களை வீசித் தானாகச் சிதைந்தழியும் கதிரியக்கப் பொருளில் ஓர் அணு அற்ப ஆயுளையும், மற்றொரு அணு நீண்ட ஆயுளையும் பெற்றிருப்பது ஏன்? வீசும் சக்தியைக் கதிர் வீசலின் அதிர்வெண்ணால் வகுத்தால் வருவது ஏன் மாறாத ஒரு எண்ணாக இருக்கின்றது? மின்னேற்றம் என்றால் என்ன? 20-ஆம் நூற்றாண்டின் தலைசிறந்த விஞ்ஞானிகளாலேயே இந்தக் கேள்விகளுக்குப் பதிலளிக்க இயலவில்லை.

'அவனன்றி ஓரணுவும் அசையாது.' அணுவினால் ஆக்கப்பட்டதுதான் இந்தப் பிண்டமும் அந்தப் பேரண்டமும். உலகில் உள்ள அனைத்துப் பொருள்களும் அணுக்களின் கூட்டமைப்பினால் உருவாக்கப்பட்டனவே. நுண்ணிய அணுவின் வெளியில் பல எலெக்ட்ரான்கள் சூரியனைச் சுற்றிவரும் கோள்களெனச் சுற்றி வருகின்றன. கனவேகத்தில் இயங்கும் அவை அவைகள் தனக்கென நிர்ணயிக்கப்பட்ட பாதையிலிருந்து பிசகி மோதிக் கொள்வதேயில்லை. பிரபஞ்ச வெளியிலும் சரி, அணுவின் நுண்வெளியிலும் சரி, இடையறாது நடைபெற்று வரும் இயக்கங்கள் செங்கோலாட்சியில் நடைபெற்று வரும் இயக்கங்களைப் போலல்லவா இருக்கின்றன. அப்படியென்றால் நுண்ணிய வெளியையும் பேரண்ட வெளியையும் செங்கோலாட்சி புரிவார் யார்?

இறைவன்தான் என்று சொன்னால், தங்களைப் பகுத்தறிவுவாதிகள் என்று கூறிக் கொள்ளும் சில கருப்புச்சட்டைக்காரர்கள் எள்ளி நகையாடுவார்கள். பகுத்தறிவு என்பது ஆழ்ந்த நம்பிக்கையையும், கற்றுவந்த பழக்கத்தையும் தவறு என்று சுட்டிக் காட்டுவதில் மட்டும் இல்லை. அதற்குச் சரியான எல்லோராலும் எளிதில் பின்பற்றக்கூடிய மாற்றைக் கண்டறிவதில்தான் இருக்கின்றது. அஞ்ஞான இருள் அகற்றுவதாகக் கூறிக்கொள்ளும் பகுத்தறிவாளர்களுள் எவர் விஞ்ஞானத்தோடு சம்பந்தப்பட்டவராக இருக்கின்றார்கள்? விஞ்ஞானம் மௌனமாக இருக்கும்பொழுது அஞ்ஞானம் புகுந்து கொண்டு வருகின்றது என்பது உண்மைதான். இப்பொழுது இறைவன் பெயரில், சிலர் சித்து வேலைகளைச் செய்து மக்களை ஏமாற்றி வருகின்றார்கள். இதற்கு மக்கள் ஏமாற்றப்படுவதைத் தவிர்க்கவேண்டுமே ஒழிய, இறைவணக்கத்தைப் புறக்கணிப்பது அழகாகாது. அஃது உடலுக்கும் உள்ளத்திற்கும் நல்லதல்ல. இறைவன் ஒரு தனியான சீவன் இல்லை. அவன் நம் எல்லோருடைய ஆன்மா என்று வேதாந்திகள் கூறுவார்கள். அது உண்மைதான். அப்படியென்றால் இறைவன் என்ற படைப்பு எதற்கு?

அரசியல்வாதிகள் பேசுகின்றார்கள், பேசிக்கொண்டேயிருக்கின்றார்கள். கருத்தில் வேறுபட்டுச் சண்டையிட்டுக்கொண்டு பிரிந்து விடுகின்றார்கள். ஏன் வீட்டில்கூட, விட்டுக் கொடுக்காமல் பேசப்பேச முரண்பாடுதான் வருகின்றது. எனவே பேசாமல் ஒருவன் இருப்பானேயானால் அவன்தானே எல்லோருக்கும் நண்பனாக இருக்க முடியும். ஊமைகளின் நிலையைக் கண்கூடாக அறிவதால் அவர்களிடம் மதிப்பும், பயபக்தியும் ஏற்படுவது இயலாது. எனவே அப்படிப்பட்ட நண்பன் சிலையாக நிற்கும் இறைவனைத் தவிர யாராக இருக்க முடியும். (இறந்த அருளாளர்களை வழிபடுவதும் இதையே வலியுறுத்துகின்றது).

ஆன்மாவை எளிதாக எல்லோராலும் உணர முடியாது என்பதற்காகவே, மதிப்பும், பய பக்தியும் தானாகவே சுரக்கும் வண்ணம் இறைவனுக்குப் பல உருவங்களைக் கொடுத்திருக்கின்றார்கள்.

இறைவன் இல்லை என்று சொல்லி எதைச் சாதிக்கப் போகின்றார்களோ தெரியவில்லை, ஆனால் அப்படிச் செய்வதால் ஏற்படும் பின் விளைவு, இறைவன் இருக்கின்றான் என்று சொல்லி ஏமாற்றி வருவதைவிட மிகவும் பயங்கரமானதாக இருக்கும். இதற்கு விஞ்ஞான அடிப்படையில்கூட விளக்கம் கொடுக்கலாம். இறைவணக்கம் தினமும் அவசியமானது. இது மனதைத் தூய்மைப்படுத்துகின்றது. எல்லைகளற்ற ஆசைகளால் அலைந்து திரியும் மனதைக் கட்டுப்படுத்துகின்றது. எந்த வேலையானாலும் அதில் முழுக் கவனத்தைச் செலுத்தி மனதை ஒருமுகப்படுத்திச் செய்தால், எளிதாகச் செய்யமுடியும். வாழ்க்கையில் முன்னேறவும் முடியும். அதற்கு ஒரு பயிற்சியாக அமைவதே இறைவணக்கம். மதங்கள் வேறுபட்டிருந்தாலும், இறைவணக்கம் என்ற பெயரிலான தியானம், இந்துக்கள், கிருத்துவர்கள், முசுலீம்கள் எல்லோராலும் தினமும் செய்யப்படுவது இதைத்தான் வலியுறுத்துகின்றது. ஆனால் மனதை ஒருமுகப்படுத்த முயற்சிப்பார் இன்று வெகுசிலரே. செய்கையால் இறைவனை வணங்கினாலும்கூட, நினைப்பால் வேறு எதைப் பற்றியோதான் நினைத்துக் கொண்டிருக்கின்றார்கள். இதனால் அவர்களுக்குக் கவனத்தை ஒருமுகப்படுத்தும் சக்தி பழக்கத்திற்கு வராமல் போகின்றது. மேலும் இறைவன் இல்லையென்றால், எண்ணங்கள் சிதறி, சமுதாயத்தின் தீய சக்திகள் தலைவிரித்தாடத் தொடங்கிவிடும். தியானத்தின்போது சுவாசித்தல் வீதம் (Breath rate) இதயத்திலிருந்து ஒருமுறை வெளிப்படும் இரத்தத்தின் அளவு முதலியன குறைவுறுகின்றன என்றும், புறத்தோலின் தடை (Skin Resistance) அதிகரிக்கின்றன என்றும், மூளையில் எண்ண அலைகள் சீராக்கப்படுகின்றன என்றும் விஞ்ஞான பூர்வமாக அறிந்திருக்கின்றார்கள். இந்த அடிப்படையிலேயே கடைநிலைத் தியானம் (Transcendental Meditation) இப்பொழுது மக்களிடையே பரப்பப்பட்டு வருகின்றது. இப்பொழுது சொல்லுங்கள் இறைவணக்கம் அவசியமா இல்லையா என்று.



---

## எங்ஙனே செய்யினும் ஏற்கும் உவந்து!

திருமால், காத்தற் கடவுள். பிரளயப் பெரு வெள்ளத்தில் அழிந்துவிடாமல், அனைத்து உலகங்களையும், உயிர்களையும் தன் திருவயிற்றில் வைத்துக் காத்தருளினன் அப்பெருமான். நீலமேக வண்ணனாகிய அப்பெருமானின் திருவடிகளைத் தவிர, மற்றொன்றையும் விரும்பாத இயல்புடையவர்கள், அவனது பக்தர்கள். அவர்கள் தாம் வரித்துக் கொண்ட தலைவனாகிய திருமாலுக்கு அடிமைத் தொழில் செய்யுங்கால் முறைபிறழ்ந்தாவது (அக்கிரமமாகவாவது), அன்றி முறை தழுவியாவது (சக்கிரமமாகவாவது), எதனை எங்ஙனம் செய்தாலும், அதனை அங்ஙனமே திருவுள்ளத்தில் உகந்து, ஏற்றுக் கொண்டருள்வன் திருமால். பக்தர்கள் காலால் எறியுமவற்றைக்கூட, இறைவன் தன்தலையால் ஏற்று மகிழ்கின்றான். இஃது இறைவனது நிறையருளின் நீர்மையாகும்.

முற்றப் புவனமெலாம் உண்ட முகில்வண்ணன்
கற்றைத் துழாய்சேர் கழல்அன்றி—மற்றொன்றை
இச்சியா அன்பர், தனக்கு எங்ஙனே செய்திடினும்
உச்சியால் ஏற்கும் உகந்து.

—ஞானசாரம்.

[முற்ற-முழுதாக. புவனம்—உலகம். முகில்—மேகம். துழாய்—துளசிமாலை. இச்சியா—விரும்பாத. உச்சியால்—தலையினால். உகந்து—விரும்பி. ஏற்கும்-ஏற்றருள்வான்.]

—ஆசிரியர்.

---

# நச்சுப் பொய்கை

கவிஞர் திரு. மனசை. ப. கீரன், B.A.,B.T.,

பாண்டவர்கள் சூதாட்ட நிபந்தனைப்படி 12 வருட வனவாசம் முடியும் காலம் நெருங்கி விட்டது. ஒரு நாள் காட்டில் ஓர் ஏழை அந்த ணன் நெருப்பை உண்டாக்குதற்கான கடைக் கோலும் கீழ்க்கட்டையும் பொருந்திய அரணிக் கட்டையில் மான் ஒன்று உராய்ந்தது. அரணிக் கட்டை அதன் கொம்பில்மாட்டிக் கொண்டது. மான் அத்துடன் ஓடத்தொடங்கிவிட்டது. அந்த அந்தணன் தன் அரணிக் கட்டையை மீட்டுத்தருமாறு பக்கத்துக் குடிசையிலிருந்த பாண்டவர்களிடம் முறையிட்டான். துள்ளிக் குதித்து ஓடிய மானை அவர்களால் பிடிக்க முடியவில்லை. அது அவர்களைக் காட்டுக்குள் வெகுதூரம் இட்டுக் கொண்டு போனது. பிறகு மறைந்துவிட்டது. பாண்டவர்கள் களைத்துப் போய் ஓர் ஆலமர நிழலில் அமர்ந்தார்கள். வெயிலில் ஓடிய களைப்பாலும் தாகத்தாலும் தவித்தார்கள். அந்தணனுக்கு அரணிக் கட்டையை மீட்டுத் தந்து உதவ முடியவில் லையே என்று நினைந்தபோது வருத்தம் அதிக மாயிற்று. வெயிலிலும் அலைச்சலிலும், வருத் தத்திலும் தண்ணீர்த் தாகம் மிக அதிகமாகி யது. வயதில் மூத்த தருமர் 'தண்ணீர் வேண்டும்' என்றார்.

நகுலன் காட்டிடையில் ஒரு மரத்தின் மேல் ஏறிப் பார்த்தான். கொஞ்சம் தூரத்தில் நீர்த் தாவரங்கள் வளர்ந்திருந்தன. அங்கே நீர்ப்பறவையும் கொக்கும் காணப்பட்டது. ஆகவே, அங்கே தண்ணீர் இருக்கவேண்டும் என்று நகுலன் நினைத்தான். தருமரும்சென்று தண்ணீர் கொண்டுவரச் சொன்னார்.

நகுலன் விரைந்தான். அவன் எதிர்பார்த் ததைப் போலவே அங்கே ஒரு தடாகம் இருந் தது. வயிறாரத் தண்ணீர் குடித்துவிட்டு அம்பறாத் தூணியில் சகோதரர்களுக்கும் கொண்டு செல்லலாம் எனத் தண்ணீரைத் தொட்டான்.

''மாத்திரிபுத்திரனே! பொறு. தண்ணீரைக் குடிக்காதே. என் கேள்விகளுக்குப் பதில்சொல். இது என் குளம். கேள்விக்குப் பதில் சொன் னால்தான் தண்ணீர் குடிக்க முடியும்'' என்ற குரல் ஒலி கேட்டது.

தாக வேகத்தில் நகுலன் இதைச் சட்டை செய்யவில்லை. தண்ணீரை அள்ளி அள்ளிக் குடித்தான்; குளத்தைவிட்டுக் கரையேறினான்; மயக்கத்தினால் விழுந்தான்.

நகுலன் சென்று நேரமாயிற்றே என்று சகோதரர்கள் கலங்கினார்கள். அவனுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்திருக்குமோ என நினைத் தார்கள். தருமர் சகாதேவனை அனுப்பினார். தடாகத்திடம் சென்றபோது நகுலன் கிடப் பதைச் சகாதேவன் கண்டான். யாரோ கொன் றிருக்க வேண்டுமென வருந்தினான். தாகம் பொறுக்காமல் நீரை நெருங்கினான், முன் போலவே சகாதேவனையும் குரல் தடுத்தது. சகாதேவனும் கேட்காமல் நீர் பருகினான். அவனும் நகுலனைப் போலவே குளக்கரையில் மயங்கி வீழ்ந்தான்.

இப்படியே அருச்சுனனும், பீமனும் மயங்கி வீழ்ந்தனர். அவர்களின் வீரமும் ஒன்றும் செய்யமுடியவில்லை. நீர்கிடைக்கா மல்தான் காட்டில் அலைகிறார்களோ என்று நல்லதையே எண்ணும் தருமர் நினைத்தார். சகோதரர்களைத் தேடிப் புறப்பட்டார்.

பசும்புல்லில் சகோதரர்கள் வீழ்ந்து கிடப் பது கண்டு துக்கம் தாளவில்லை. வனவாசம் முடியும் நிலையில், சபதம் முடிக்காமல் வீழ்ந் ததை எண்ணிக் கலங்கினார், தருமர். இதுவும் துரியோதனன் சதியாக இருக்கலாம், தண்ணீ ரில் நச்சு கலந்திருக்கலாம், என்ற எண்ணம் ஓடியது. எனினும் தாகத்தால் இழுக்கப்பட்டுத் தருமரும் நீரை நெருங்கினார். முன்போலவே அசரீரி கேட்டது. தருமர், ''இது யமன் குரல்தான்'' என நினைத்துக் 'கேள்விகளைக் கேள், பதில் சொல்கிறேன்' என்றார்.

''மனிதனுக்குத் துணை எது?''

'தைரியம்',

''மனிதன் புத்திமானாக எந்தச் சாத்தி ரங்களைப் படிக்கவேண்டும்?''

'பெரியோரைத் துணைக் கொண்டே மனிதன் புத்திமானாகிறான்'

''தாங்கும் நிலத்தைவிடச் சிறந்தது எது?'

'தாய்',

''வானைவிட உயர்ந்தது...?''

'தந்தை',

''காற்றைவிட விசையானது?''

'மனம்'

''புல்லிலும் அற்பமானது......?''

'கவலை'

''தேசாந்திரம் போவோனுக்குத் தோழன் யார்?''

'கல்வி'

''வீட்டில் தோழன் யார்?''

'மனைவி'

''சாகும் கிழவனுக்குத் துணை....?''

'தானம்',

''பாத்திரங்களில் பெரியது...?''

'எல்லாவற்றையும் தன்னுள் அடக்கும் பூமி'

''சுகத்தை நிலையாகப் பெறுவது எப்படி?

'நல்லொழுக்கத்தில் சுகம் நிலைக்கும்',

''எதை இழந்துவிடுவதில் துயரம் இல்லை?

'கோபத்தை இழந்தால் துயரமே அணுகாது',

இப்படி அசரீரி கேட்ட கேள்விகள் பலவற்றுக்கும் தருமர் உடனுக்குடன் பதில் கூறினார். தற்காலத்தில் வேலைக்கும், மேல்படிப்புக்கும் நடக்கும் நேர்முகத் தேர்வுகளில் கேட்பன போல இருக்கிறது, அல்லவா?

''மிக்க மகிழ்ச்சி. நன்றாகப் பதில் சொன்னாய். ஆனால் இறந்து வீழ்ந்த உன் சகோதரர்களில் ஒருவர் மட்டுமே பிழைக்க முடியும். நீ யாரை விரும்புகிறாயோ, அவரைப் பிழைக்கச் செய்கிறேன். யார் வேண்டும்? நன்றாக யோசித்துச் சொல்'' என்றது, அசரீரி.

தருமர் யோசித்தார். 'நகுலன் உயிர் பிழைக்கட்டும்' என்றார்.

யட்சன் தருமரின் முன் தோன்றினான். 'உனக்குப் பலமான அருச்சுனனையும் பீமனையும் விட்டு நகுலனைக் கேட்டாயே? காரணம் என்ன?'' என்றான்.

'நகுலன் மாத்திரியின் புத்திரன். மற்ற நாங்கள் நால்வரும் குந்தியின் பிள்ளைகள். குந்திக்கு நான் உயிரோடிருக்கிறேன். மாத்திரிக்கு நகுலன் பிழைக்கட்டுமே, என்று நினைந்தே கேட்டேன்' என்றார் தருமர்.

யட்சன் களித்துத் தழுவினான். ''பட்சபாதம் அறியாத என் மகனே! உன் சகோதரர் அனைவரும் பிழைத்து எழுவார்கள். 12 ஆண்டு வனவாசம் முடிய வெகு சில நாட்களே உள்ளன. உங்களின் தலைமறைவு வாழ்வும் நன்கு நிறைவேறும்!'' என்று வாழ்த்தி மறைந்தான். வீழ்ந்த சகோதரர்கள் எழுந்தார்கள்.

தருமர் தாகத்தில் தவித்த பொழுதும் யட்சனுக்குப் பதில் சொன்னார். மானாகவும், யட்சனாகவும் வந்து தன் மகன் தருமரைச் சோதித்தது தருமதேவதையே. மாறாத தருமரின் பண்பு கண்டு மகிழ்ந்து, உலகுக்கு வழி காட்டும் உண்மைகளைக் கலங்காமல் நெருக்கடி நிலையிலும் எடுத்துக் கூறினார். இதிலிருந்து, எவ்வளவு இன்னல்கள் வந்தாலும் அவசரப்படாமல் இருக்க வேண்டும், என்பதை உணருகின்றோம். சகோதரர்களானாலும் வேற்றுமை பாராட்டாமல் அறவழியில் நடக்க வேண்டும் என்ற உறுதி பிறக்கின்றது. அதனால் பாண்டவர்கள் உயிர் பெற்றதைப்போல நாமும் இறவா இன்பம் பெறுவோம், என்று தெளிய வேண்டும். இதனால் உலகின்---சமுயத்தின் அன்பும் ஆதரவும் அறச்சிந்தனையாளருக்குக் கிடைக்கும் என்பது உறுதியாகிறதல்லவா?

---

## இராமாயணமும், இலியதமும்

எகிப்து தேசத்தில் நமது இராமரின் திருப்பெயர், பெரிதும் பரவியிருந்ததாகத் தெரிகின்றது. அந்நாட்டின் வரலாற்று நூல்களில் முதலாம் இராமேசஸ் ,இரண்டாம் இராமேசஸ் என்னும் பெயர்கள் பல காணப்படுகின்றன. எகிப்து நாட்டிலுள்ள சகாரா என்னும் பாலைநிலப் பெயருக்கும், இராமாயணத்தில் வரும் பகீரதனின் முன்னோர்கள் ஆகிய சகரர் என்பவர்களின் பெயருக்கும் இடையே தொடர்பு இருப்பதாக அறிஞர்கள் கருதுகின்றனர். கிரேக்க நாட்டின் இணையற்ற பெருங் காப்பியம் ஆகிய இலியதம் ( Iliad ) என்னும் காப்பியத்தின் கதையில் வரும் மாந்தர்களுக்கும் (Characters), இராமாயணம் என்னும் நம்நாட்டு இதிகாசத்தில் வரும் மாந்தர்களுக்கும் இடையே, பலதிற ஒப்புமைத் தன்மைகள் காணப்படுகின்றன. இவ்விரு பெரு நூல்களுமே போர் நிகழ்ச்சியினை அடிப்படைப் பொருளாகக் கொண்டுள்ளன. இரண்டிலுமே ஒருவன் மனைவியை மற்றொருவன் கவர்ந்துகொண்டு சென்றுவிடும் செய்தி கூறப்படுகின்றது. கிரேக்க நாட்டின் இலியதம் என்னும் காவியத்தில் வரும் மெனிலசு (Menelaus) இராமன்: எலன் (Helen) சீதை; ஸ்பார்ட்டா நகர் (Sparta), அயோத்தி மாநகரம்; டிராய் நகர் (Troy) இலங்கை மாநகரம்; அகமெம்னன் (Agamemnon) சுக்கிரீவன்; பெட்ராக்ளஸ் (Petroclus) இலக்குவன்; நெஸ்ட்டார் (Nestor) ஜாம்பவான்; யுலிஸிஸ் (Ulysses) ஆஞ்சநேயன்; எக்டார் (Hector) இந்திரசித்து என்று கூறலாம்படி, ஓரளவு ஒப்புமைத் தன்மை, இவ்விரு பெரு நூல்களிலும் அமைந்து கிடக்கின்றது. இன்னோரனைய சான்றுகள் பலவும், இந்துமதத்தின் கருத்துக்கள், கதைகள், கொள்கைகள், உலகின் பல பகுதிகளிலும் சென்று பரவியிருந்த செய்தியினை, நுண்ணிதின் எண்ணியுணரப் பயன்படும் இனிய அரிய சான்றுகள் ஆகும் எனலாம். —ஆசிரியர்

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

திரு கி. கோதண்டபாணி, எம்.ஏ.. பி.ஓ.எல்.,
[பேராசிரியர், புஷ்பம் கல்லூரி, பூண்டி.]

பிள்ளைமைப் பண்பில் உள்ள கள்ளமற்ற தன்மை, புலவர் உள்ளங்களைப் பெரிதும் கவர்வதில் வியப்பொன்றுமில்லை. பகைவரும் விரும்பி நோக்கும் குற்றமற்ற அழகிய, இனிய காட்சியைப் பெற்றவர்கள் குழவிப்பருவத்தினரேயாவர். இதனையே ''செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச் சிறுவர்ப் பயந்த செம்மலோர்'' என்று புலவர் கூறினர். வாழ்க்கை என்னும் பொய்கையிலே கவலை என்ற நஞ்சு கலக்கப்படாத பருவம் குழவிப்பருவம். உயர் பண்புகளும், நல்ல தூய எண்ணங்களும் பூத்துக் கமகம எனக்கமழ்ந்து மணம் பரப்பும் நல்மனம் படைத்தவர்கள் பிள்ளைகள். இதனாலன்றோ பிள்ளைப் பருவத்தில் எல்லையற்ற பற்றுக் கொண்டு, பாண்டியன் அறிவுடைநம்பி 'படைப்புப் பலபடைத்து'' என்ற செய்யுளில் குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும் மயக்குறு மக்களை இல்லோர்க்குப், பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே'' எனப் பாடிச் சென்றார். இக்குழவிப் பருவச் செயலையும், சொல்லையும் மனத்திற் கொண்டே வள்ளுவர் பெருமானும், ''குழலினிது யாழினிது'' என்ப தம் மக்கள் மழலைச் சொற்கேளாதவர்'' எனவும், ''மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர் சொற்கேட்டல் இன்பம் செவிக்கு'' என்றும் கூறிச் செங்கீரைப் பருவத்திற்கும், வருகைப் பருவத்திற்கும் கால்கோள் செய்தார்.

**சிறுபறைப் பருவம் :**

இத்தகைய கருத்துக்களை எல்லாம் உள்ளத்தே கொண்டு ''பகழிக்கூத்தர்'' என்னும் புலவர் பெருமான், திருச்செந்தூர்ப் பிள்ளை தமிழினைத் தெய்வத் தமிழ்ப் பாக்களால் தேனூறுஞ் சொல்லில் தித்திக்கப் பாடியுள்ளார். இவரது பாடல்களில் செவ்விய மதுரஞ்சேர்ந்த சீரிய, கூரிய சொற்கள் செம்மையாகப் படிந்துள்ளன. உற்றுநோக்கி ஆழப்பயில்வார்க்கு இந்நுட்பம் புலனாகும். இயற்கை நிகழ்ச்சிகளைப் பகழிக் கூத்தர் தற்குறிப்பேற்றமாகப் புனைந்து கூறும் திறம் வியக்கற்பாலதொன்றாகும். ''திருச்சீரலைவாய் என்ற பெயர் பெற்ற திருத்தலமாகிய திருச்செந்தூரில் கடலும் கடல்சார்ந்த நிலமாகிய நெய்தல் வளனும், வயலும், வயல் சார்ந்த நிலமாகிய மருதவளனும் மயங்கிக் கிடக்கிறது. இவ்வாறு இவ்விரு நிலவளங்களும் மயங்கிக் கிடக்கும் மாட்சியைக் கீழ்வரும் பாடலில் ஓவியமாகத் தீட்டிக் காட்டுகின்றார். கடல் நிலப் பகுதியான நெய்தல்நில மகளிரின் முகிழ் முலைக்கு நாணி 'இதனை நாம் ஒப்பாகோம்' என்று எண்ணி வயல் நிலப் பகுதியில் தழைத்து வளர்ந்த தாமரை ஒற்றைக்காலினை ஊன்றி நீரில் நின்று தவம் புரிந்து கொண்டுள்ளதாம் திருச்செந்தூரில். மேலும் கூரிய வேல்போன்ற நெய்தல் நில மகளிரின் கண்களுக்குத் தோற்று நீலோற்பல மலர்கள் ஒடுங்கி நிற்கின்றனவாம். நெய்தல் நிலம் பெண்டிரது நீண்ட கரிய குழலைக் கண்டு கரிய மேகங்கள் நிறுத்தினால் ''இதனை நிச்சயம் நாம் ஒப்பாக மாட்டோம்'' என எண்ணி உடலை வெறுத்து அந்தரசாரிகளாய் அலைந்து திரிகின்றனவாம். இவ்வாறு திருச்செந்தூரின் இயற்கை வளங்களை அழகுபட அடுக்கிச் செல்கின்றார். இனி, பாடலினையே பார்ப்போம்!

''முருந்தாரும்மணி முறுவல் நெய்தல் நில
மகளிரின்
முகிழ்முலை தனக்குடைந்து,
முளரிமுகை நீரிற்குளித்து நின் றொரு தாளின்
முற்றிய தவம்புரிய, வெங்
கருந்தாரை நெட்டிலைப் புகர்வேல் எனப்
பொருங்
கட்கடைக் குள்ளுடைந்து,
காவிமலர் பங்கப்படக், கருங்குழல் கண்டு
கரியமுகில் உடல் வெளுத்துப்
பொருந்தாமல் ஓடி அந்தர சாரியாயொரு
பொருப்பேற, வளமை ஏறும்
புகழேற வாழும் திருச்செந்திலாய்! உனது
பொற்றாள் வணக்கமுற்றுத்
திருந்தார்கள் நெஞ்சம் பெரும் பறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே!
செருவிலெதிர் பொருதபர நிருதர் குல கலகனே
சிறுபறை முழக்கியருளே''

என்பது பகழிக் கூத்தர் வாக்காகும்.

**முத்தப் பருவம் :**

இனி முத்தின் சிறப்பினைப் புலவர் வாய்மொழி கொண்டு அறிவோம். ''நத்தை வயிற்றில் முத்துப்போல்'' எனவும் ''யாரே அறிவார் நல்லார் பிறக்குங்குடி'' என்றும் நம் நாட்டில்

வழங்கி வரும் முதுமொழிகள் எளிய குடியிற் பிறந்து உயர்மனம் படைத்தோராய் வாழ்ப வரைக் குறிக்க எழுந்துள்ளன. இத்தகைய முத்துக்கள் ஆணிமுத்தாய், அழகுக்கு அழகு செய்வதாய் மங்கையர்க்கு முத்தாரமாய் அணி செய்தன. திருச்சீரலைவாய்க் கடற்கரை யில் அலைகள் கொழிக்கும் முத்துக்களின் அழ கினைப் பார்க்கின்றார் பகழிக் கூத்தர். பின்னர் மலை நாட்டிலிருந்து முருகனைப் பணியவரும் வேழங்களின் நீண்ட மருப்பில் விளைந்து உதிர் கின்ற முத்துக்களையும் காண்கின்றார். இதற் கும் மேலாகக் கொத்துக் கொத்தாக முற்றி முதிர்ந்து விளைந்துள்ள பசிய நெற்கதிரின் இயற்கை முத்துக்களையும் கண்டு மகிழ்கின் றார். பின்னர் மேகம் கறுத்து மழையாக உலகிற்குச் சுரந்து அளிக்கும்போது வீழும் குளிர்முத்தினையும் கண்டு மகிழ்கின்றார் புலவர். இத்துணை முத்துக்களையும் கண்ட அவர் உள்ளம் நிறைவு பெறவில்லை. காரணம் யாதெனில் இத்துணை முத்துக்களும் நம் எழில் முருகனின் கொவ்வைக்கனி போன்ற வாயி லிருந்து கொடுக்கும் முத்தத் திறனுக்கு ஈடாக வில்லையே என்று. அதனால் இறும்பூது எய்து கின்றார். மேலும் மேற்கூறிய முத்துக்களுக் கெல்லாம் விலையும் பொருள் மதிப்பும் உண்டு. ஒரு விலைஞன் (முத்து வாணிகன்) மதிப்பிட்டு விலை கூறிவிடுவான். ஆனால் முருகா! நின் கனிவாய் முத்தினுக்கு யார்தான் விலை கூற முடியும். விலை மதிக்க இயலா முத்தினை நின் கனிவாயிலிருந்து அள்ளி அள்ளிக் கொடுப்பா யாக.

''நீ, அள்ளிக் கொடுக்கும் இம்முத்துக்கள் எவ்வளவு கொடுத்தாலும் குறையாது. ஆனால் மேற்கூறிய முத்துக்கள் கொடுக்கக் கொடுக்க குறைந்துகொண்டே வரும்தன்மையது'' என அழகுறக் கவிதை புனைகின்றார். கவிதையைக் காண்போம்.

''கத்துந் தரங்கம் எடுத் தெறியக்
 கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்திற்
 கான்ற மணிக்கு விலையுண்டு;
தத்தும் கரட விகட தட
 தந்திப் பிறைக்கூன் மருப்பில் விளை
தரளந் தனக்கு விலையுண்டு;
 தழைத்துக் கழுத்து வளைந்துமணிக்
கொத்தும் சுமந்த பசுஞ்சாலிக்
 குளிர் முத்தினுக்கு விலையுண்டு;
கொண்டல் தரு நித்திலந் தனக்குக்
 கூறும் தரமுண்டு;உன் கனிவாய்
முத்தந்தனக்கு விலையில்லை
 முருகா! முத்தந்தருகவே
முத்தஞ் சொரியும் கடலலைவாய்
 முதல்வா முத்தம் தருகவே'' என்பது

### இனிய பாடல் :

திருச்செந்தூர் பிள்ளைத் தமிழில் இடம் பெற் றுள்ள முத்தப்பருவ முதற்பாட்டாகவுள்ள இப்பா, இந்நூலின் தலைப்பாவாக விளங்கி இலக்கிய நயமும், அணி நயமும், பொருள் நயமும் அளிக்கின்றது. இம்முத்தப் பருவப் பிள்ளைத் தமிழ்ப்பாடல் குமரகுருபரர் இயற் றிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் இடம் பெறும் வருகைப் பருவப் பாடலாகிய ''தொடுக் கும் கடவுள் பழல் பாடல் தொடையின் பயனே'' என்ற பாடலோடு ஒத்துப் பாராட்டப் படும் பாடலாகும். திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் என்று கூறியவுடனே பயில்வாரின் உள் ளத்தே நின்று இனிக்கும் பாடல் ''கத்தும்தரங் கம்'' என்ற பாடலேயாகும். எவ்வாறு ''மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'' என்று கூறியவுடன் வருகைப் பருவப்பாடல் ''தொடுக் கும் கடவுள் பழம்பாடல்'' நினைவிற்கு வரு கின்றதோ அதேபோல் இலக்கியந்தோறும் இனிக்கும் பாடல்கள் சிலவே இருக்கும். ஆனால் செந்தூர்ப்பிள்ளைத்தமிழில் அனைத்தும் இனிக் கும் பாடல்களாய் அமைந்துள்ளன. நான்கு வரிகளில் அமைந்த பாடலாயினும் நாள்தோறும் காலந்தோறும் நின்றுநிலைக்கும் காலத்தை வென்ற பாடலாகச் சில தோன்றிவிடுதலைப் பார்க்கின்றோம். கபிலர் பாரியைப் பாடிய பாடல் ஒரு நான்கே வரியில் இயன்ற பாடல் தான். ஆனால் அது உலகு உள்ள அளவும் புகழ் பெற்று ஒளிர்கின்றதே, அதுபோன்றதே இந்தத் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்ப் பாடலும் ஆகும்.

---

## ஒப்புமைத் தன்மைகள் : கிருட்டிணனும் கிறித்துவும்

எத்துணையோ பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த கண்ணபிரானின் திருவவதாரம் பற்றிய வரலாறு, மேலை நாடுகளிலும் மிகப் பழங்காலத்திலேயே பரவியிருந்ததாகத் தெரிகின்றது. கண்ணபிரானின் வரலாற்றைப் போலவே, இயேசுநாதரின் பிறப்பைப் பற்றிய வரலாறும் அமைந்து காணப்படுகின்றது. இரண்டிற்கும் இடையே பெரிதும் ஒப்புமைத் தன்மை மிக்குத் திகழ்கின்றது. இருவரும் இரவிலேயே பிறந்தனர். கண்ணன், கம்சன் பொருட்டு ஒளிந்து வளர்ந்தான். இயேசுநாதர் ஏரோது (Herod) என்னும் அரசனின் பொருட்டு அஞ்சி மறைந்து வளர்க்கப்பெற்றார். கம்சனைப் போலவே, ஏரோது அரசனும் தனது உயிர்ப் பாதுகாப்பின் பொருட்டுப் பல குழந்தைகளைக் கொல் வித்தான். கம்சனுக்குக் கண்ணபிரான் அவதாரம் பற்றிய அறிவிப்பு, முன்னரே நிகழ்ந்தது. அவ் வாறே, ஏரோது அரசனுக்கும் அசரீரியினால் இயேசுநாதரின் அவதாரச் செய்தி அறிவிக்கப்பெற்றது. கண்ணபிரான் சிறையிலே பிறந்தார். இயேசு தொழுவத்திலே பிறந்தார். இயேசுவை 'நல்ல மேய்ப்பன்' (Good Shepherd) என்று போற்றுபவர். அவ்வாறே கண்ணபிரானும் ஆயர்பாடியில் இடையர்களில் ஒருவனாகப் பசுக்களை மேய்ப்பவனும் காப்பவனுமாகக் 'கோபாலன்' என்று பெயர் பெற்று விளங்கி னான்; இயேசு மலைச் சொற்பொழிவு (Sermon on the Mount) நிகழ்த்தினார். கண்ணபிரான் குருக்கேத்திரத்தில் தேர்த் தட்டின்மீது இருந்து, பகவத்கீதை (Song Celestial) உபதேசம் புரிந்தார். இத்தகைய ஒப்புமைகள் பலவும் நாம் அறிந்துணர்ந்து மகிழ்தற்குரியன. —ஆசிரியர்.

# திருச்சிற்றம்பலக்கோவையார்

## கருத்துத் தொகுப்புச் சுருக்கம்

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

(முற்றொடர்ச்சி)

தலைவன்: தேனும் வண்டும் உறைகின்ற கொன்றை மலரை அணிந்த சிவபிரானின், சிற்றம்பலத்தை வழுத்துகின்ற அன்பர்கள் பெறுவது, இன்பம் மிக்க வானுலகம். அதன்கண் உளவாகிய, வளவிய இடங்களின் நுகர்ச்சி நலங்களையெல்லாம் உண்மையில் எனக்குத் தருகின்றவனும், நிலைபெற்ற குதலைச் சொற்களைப் பேசுகின்ற வாயை உடையவனும், வளம் நிறைந்த திருப்பாற்கடல் அளித்த பெருமை மிக்க அமிழ்தம் போன்றவனும், என்னுடைய இளம்சிறு புதல்வன்! அவன் என்னை வந்து அணைகின்றிலன். என்னுடைய இனிய சிறிய மகனின் துணையின்றி, நறுமணத்தால் வண்டுகள் தேடிவந்து உறைகின்ற அழகிய கொங்கைகளை உடைய தலைவியை, யான் இனிச் சென்று அடைந்து பொருந்துவது எவ்வாறு? (380)

தலைவன்: தனக்கு நேர்ந்த இடர் நீங்குதல் குறித்து வந்து அடைந்த பாம்பினை, தனது சடையின்கண் உள்ள இளம் பிறையின் பக்கத்தில் சூடி, அதனை வருந்தாமற் செய்து, மகிழ்ச்சியுடன் ஆடும்படி வைத்தருளியவன் சிவபெருமான். அப்பெருமானின் சிற்றம்பலம், நிலைபெற்ற மேகங்கள் தங்கிய பெரிய மதிலை உடைய தில்லையில் உள்ளது. அத் தில்லையைச் சூழ்ந்துள்ள நல்ல நாட்டிற் பொலிவுற்று வாழ்கின்ற, கற்புமிக்க அழகிய இளம் மகளிர்கள், அழகிய கயல்போலும் கண்களை உடைய தலைவியின் இரண்டு கண்களால் நோக்கப்பெற்று, ஒரு காலைக்கு ஒரு கால் மிகுந்து பெருகுகின்ற அச்சத்தாலும், மயக்கத்தாலும், யான் எய்துகின்ற வாட்டத்தினையும், மயக்கத்தினையும் தவிர்த்து, எனக்கு உதவிபுரியும் கடப்பாடு உடையவராவர். ஆயினும், அவர்கள் எனது வாட்டத்தினையும் மயக்கத்தினையும் நீக்க முயலாமல், பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்கின்றனர். இதற்குக் காரணம், என் துன்பங்களைத் தீர்க்கலாகாது என்று ,இவர்கள் ஏதேனும் விரதம் கொண்டுள்ளனர் போலும்! இங்ஙனம் இவர்கள் பூண்டுள்ள விரதம்தான் யாதோ? எற்றுக்கோ? தெரிந்திலது!

[இச் செய்யுள், முன்னிலைப் புறமொழி. நீ என் வாட்டமும் வருத்தமும் கண்டு வறிதே இராமல், அவற்றை நீக்கியருள்க என்று தலைவன் தோழியை வேண்டிக் கொள்வது இதன் கருத்து. 'தில்லை நன்னாட்டுப் பொலிபவர்' என்றது தோழியை. 'கயல் வந்த கண்ணியர்' என்றது தலைவியை. காதரம்-அச்சம். மயல்-மயக்கம். இதன்கண் ''மாமதியின் அயல், வந்த ஆடு அரவு ஆட வைத்தோன்'' என்பது அழகிய இனிய உள்ளுறை உவமைப் பொருள் உடையது. மதி தலைவி, அரவு தலைவன், இறைவன் தோழி. இறைவன் பாம்பையும் மதியையும் தம்மிற் பகையறுத்து ஓரிடத்தே விளங்க வைத்தாற்போல, என்னுடன் தலைவிக்கு உண்டாகிய ஊடலைத் தவிர்த்து ஒற்றுமைப்படுத்தி இன்புற வைத்தல், தோழியாகிய நினக்குக் கடன் என்று தலைவன் வேண்டிக் கொள்ளும் குறிப்பு, இதன்கண் அமைந்துள்ளது. ''விரதம் உடையர் விருந்தொடு பேச்சின்மை, மீட்டு அது அன்றேல் சரதம் உடையர், மணிவாய் திறக்கின் சலக்கு என்பவே'' (57) என முன்னரும் வந்திருத்தல் அறிதற்குரியது] (381)

தோழி: தலைவரே! கூற்றம்போலச் சினத்தை உடைய யாளிகள், நாம் செல்லும் காட்டு வழிகளில் உள்ளன, அவைகள் நமக்கு ஊறு செய்யுமே என்று கருதாமலும்; கண்களின் பார்வையைக் கெடுத்து, அதன்கண் உள்ள பாவையையும் சிதறச் செய்ய வல்லதாய், அடர்ந்து செறிந்த கொடிய இருளை இடையூறாக எண்ணாமலும்; கன்றைப் பிரிந்த தாய்ப் பசுபோல, முன்பெல்லாம் எங்கள் தலைவியை அடைய விரும்பி, நீர் வந்து கொண்டிருப்பீர்! இன்றோ, அத்தகைய நீர், எம் ஈசராகிய சிவபெருமானின் தில்லையில், எம்மோடு பொருந்தாத தீய பரத்தையர்களின், கொடியை உடைய நெடிய தெருவின்கண், எந்தத் தேரில் முன்பெல்லாம் எங்கள்பால் ஏறி ஊர்ந்து வந்தீரோ, அந்தத் தேரிலேயே, எம்மைப் புறக்கணித்துவிட்டுப், பரத்தையர்கள்பால் அவர்களைத் தேடிக் கொண்டு செல்கின்றீர்! எங்கள்பால் நீர் கொண்டிருந்த அருள், இவ்வாறோ மாறிப்போதல் வேண்டும்? (382)

தோழி: கார்காலத்து மயிலைப் போன்ற தலைவியே! கயிலாய மலையை எடுக்க வந்த அரக்கனாகிய, இராவணனது கையும் தலையும் உடலிலிருந்து நீங்கும்படி, கால் விரலால் மிதித்து நசுக்கியவன், புலியூர்ச் சிவபெருமான்! அப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இம்மலை

நிலத்தின்கண், முன்பொரு காலத்தில் நம்மைக் கொல்லவந்த மெல்லிய தலையை உடைய யானையை, நமக்கு அதனால் ஊறுபாடு ஏதும் நேராதபடி வென்றுகொன்ற விருந்தினர், நம் தலைவர்! வானளாவிய தமது வெண்கொற்றக் குடையின்கீழ் அரசர் போல வைகியிருக்கும் அவரை, இக் கடலால் சூழப்பட்ட உலகத்துள்ளார் எல்லாரும், வியந்து உவந்து பணிந்து வணங்குவர். அத்தகைய அவர், தமது பெருமையினைச் சிறிதும் நினையாது, நம்முடைய வாயிலின்கண் வந்து, தமது வேட்கைப் பெருக்கம் மிகுதியாகத் தோன்ற, மிகவும் பணிவுடன் நின்று கொண்டுள்ளார். மேலும் அவர், தாம் ஒன்றும் சொல்ல இயலாதவராய்ச் செயலற்றுக் காணப்படுகின்றார். ஆதலின் இனியும் நாம் நம் தலைவரைப் புறக்கணித்து மறுத்தல் முறையன்று. (383)

வீட்டிலுள்ளோர்: தேவியைத் தன் திருமேனியின் இடப்பாகத்தில் கொண்டவர் சிவபிரான். அவரது சிற்றம்பலத்தின்கண் எழுதப்பட்ட ஓவியம் போன்று அழகிய ஒளி பொருந்திய நெற்றியை உடையவள், நம் தலைவி. அவளுக்கு மகிழ்ச்சியைத் தரும் செய்தியைக் கொண்டு செல்ல விரும்பி ''நின் காதலர் வந்துவிட்டார்; அதற்கு அடையாளமாக எழுகின்ற இனிய இயங்களின் ஒலியைக் கேட்டனையோ?'' என்று, தலைவனின் வருகையைக் கண்டவர்கள், தலைவியின்பால் நேரிற் சென்று சொல்லினர். அது கேட்டுத் தலைவி பெருமூச்சு விட்டாள். அவளுடைய குவளைப் பூப்போன்ற கருமையான கண்கள், ஊடலின் சினத்தால் செங்கழுநீர் மலர்கள் போலச், சிவந்த நிறத்தை அடைந்து நின்றன. இனி யாது நிகழுமோ?

['தேவி அங்கண் திகழ் மேனியன்' என்பதற்குத் தேவியினுடைய அழகிய கண்மலர்கள் சென்று படிந்து விளங்கும் திருமேனியையுடையவன் என்றும் பொருள் கொள்ளலாம்.] (384

தலைவி: முத்துப்போன்று ஒளிமிகுந்த, அழகிய பற்களை உடைய தோழியே! நம்முடைய காதலராகிய தலைவர், உடை மணியை அரையில் அணிந்து, சிறு தேர் உருட்டி, உலாவி நடக்கின்ற, மணிபோலும் இப்புதல்வனை, நமக்குத் தந்த பின்னர், நான்முகனும் மாலும் தேடியும் அறியாத, விடை மணிகண்டராகிய சிவபெருமானது வளம் பொருந்திய தில்லையின்கண், மெல்லிய மயிலைப் போன்ற நமது தோழியர் கூட்டத்தின் முன்னிலையில், நம் வாயிலை இன்றுதான் வந்து கண்டுள்ளார். நம்பால் நம் தலைவர் கொண்டுள்ள அருளின் திறம் இதுவே போலும்! இத்தகைய நம் தலைவரை, இங்கு நாம் ஒரு சிறிதும் அன்புகாட்டி வரவேற்றல் வேண்டா. அவரைத் தம் விருப்பம்போல், தாம் விரும்பும் பரத்தையர் இல்லங்களுக்கே செல்லுமாறு சொல்லுதல் அமையும். (385)

தலைவி: பசுவின் புலாலை உண்ணுகின்ற புலையனாகிய இழிந்த பாணனே! கூர்மை பொருந்திய ஊசியைக், கொல்லரது சேரியின்கண் கொண்டு சென்று விற்க முயன்று, வீணாக அலைந்து திரிபவர்களைப்போல, நீ எம்முடைய இல்லத்திற்குப் பலகாலும் போந்து, புதிய புதிய வெவ்வேறான பொய்யுரைகளை நாள்தோறும் வீணாகப் புனைந்து கொண்டு வந்து கூறுகின்றாய். கருமை பொருந்திய கண்டத்தை உடைய சிவபெருமானின் தில்லையின்கண் உள்ளவரும், வளம் மல்கிய ஊரை உடையவருமாகிய தலைவர், என்பால் உண்மையான அன்புடையவர் என்றும், எம்மிடத்தில் என்றும் நீங்காத அருள்நலம் பெரிதும் உடையவர் என்றும், நீ கூறுதல் வேண்டுமோ! இப் பொய்யுரை கூறவோ நீ இங்கு வந்தாய்? எம் தலைவரின் போலி அன்பின் திறனை, யான் நன்கினிது உணர்வேன். (386)

பாணன்: கொல்லனது தொழிற் திறன் நன்கு விளங்குகின்ற, மழுப்படையை ஏந்திய சிவபெருமானின், குளிர்ந்த தில்லையைப் போன்று சிறந்த தலைவியே! வில்லினும் சிறந்து வளைந்த அழகிய நினது புருவம் நெரியவும், சிவந்த இதழ்கள் துடிக்கவும், என்பால் சீற்றம் மிகவும் கொண்டு, என்மேல் எறிவதற்காக நீ கல்லை எடுத்தல் வேண்டா! நினது கருமையான கண்களில், சினத்தினால் எழுந்த சிவந்த நிறத்தை மாற்றிக்கொண்டு, சினந் தவிர்ந்து என்னைப் பொறுத்தருள்க. பணிவு மிக்க இனிய சொற்களை உடைய தலைவியே! நீ பல்லாண்டு வாழ்க! இனி யான் இங்கு நிற்கவும் மாட்டேன். நினது சீற்றத்திற்கு ஆளாகிவிட்ட யான், இனி இவ்வூரை விட்டு அகன்று, வேறு எங்கேனும் சென்றுவிடுகின்றேன். அதற்காக உன் திருவடிகளைப் பணிந்து வலஞ் செய்து வணங்கி, நின்பால்விடையும் பெற்றுக் கொள்கின்றேன். (387)

வீட்டிலுள்ளோர்: மதக் களிப்பை உடைய யானையின் தோலை உரித்துப் போர்த்த, சிவபிரானின் தில்லையிலுள்ள ஊரவராகிய ''நம் தலைவர் வருகின்றார்'' என்று சொல்லத் தொடங்கி, முடிக்காத முன்னரே, கிளியைப் போலும் இனிய சொற்களை உடைய நம் தலைவியின் முகமாகிய தாமரையில், நெருப்புப் பொறி பறக்கும் கூர்மையான வேலைப் போன்று, கண்கள் பிறழ்ந்து பாய்ந்து நின்றன. அம்மட்டோ! சினத்தால் செங்கழுநீர் போலச் சிவந்து, கண்ணீர்த் துளியாகிய முத்துக்களையும் சிதறலாயின. அந்நிலைமையில், ''தலைவர் தனியாக வரவில்லை, விருந்தினருடன் வந்து கொண்டிருக்கின்றார்'' என்று சொல்லத் தொடங்கி முடிக்காத முன்னரேயே, சினத்தால் சிவந்திருந்த தலைவியின் கண்கள் சினம் தணிந்து, முன்பு எப்போதும் இருப்பதுபோலக் கருமைநிறம் உற்றுக் கருங்குவளை மலர்கள் போல, அழகாக மலர்ந்து மகிழ்ச்சியைப் புலப்படுத்தின. இத்தலைவியின் மனையறத்தின் மாண்பு இருந்தவாறு என்னே! (388

தோழி: பேய்க் கூட்டங்கள் கரணங்கள் பாய்ந்து மகிழும்படி, புறங்காட்டின்கண் நடனம் செய்தலை விரும்பிய, அழிவற்ற சிவபிரானின், தில்லையைப் போன்ற சிறந்த தலைவியே! தழுவி அணைத்தும், முத்தம் கொண்டும், தனது தோளில் ஏறி விளையாடு

கின்ற, நம்முடைய மைந்தனைத் தனக்குத் துணையாக எடுத்துக்கொண்டு, நம் தலைவர் நம்மிடம் வந்திருக்கின்றார். தன்பால் நாம் கொண்டுள்ள ஊடலாகிய சீற்றத்தைத் தணிவித்தற் பொருட்டே, நம்முடைய புதல்வனைத் துணைக்கொண்டு, நம் தலைவர் இங்கு வந்துள்ளார். ஆதலால், இனியேனும் நீ நினது ஊடலும் கவலையும் ஒழிந்து, நம் தலைவராகிய அரசனுக்குக் குற்றேவல் புரியக் கடமைப்பட்டுள்ளாய். (389)

தலைவி : சேல் மீன்கள் விளங்குகின்ற வயலை உடைய, சிற்றம்பலவரின் தில்லை மாநகரிடத்தில், வேல்போலும் கண்ணை உடையராய் இருக்கின்ற, நின் காதலியராகிய இளம் பரத்தைப் பெண்கள், நீ இப்போது எம்பாற் காட்டுகின்ற பணிவு அடக்கச் செயல்களை அறிந்தால், நின்பால் வெகுளி கொள்வர். அது மட்டுமன்று. இச் சிறுவனால் உண்டாக்கப் பெற்ற பால் பெருகி, எம் மேனியில் புலப்படுகின்ற தன்மையில் யாம் உள்ளேம். ஆதலால் நின்னை அணைவதற்கு, யாம் தகுதி உடையேம் அல்லேம். மேலும் யாமும் நீயும் பொருந்துகின்ற இச் செயல், நாணம் அற்றதும், கள்ளம் உடையதும் ஆகும். அதனால் நின் போலி அன்பை யாம் விரும்பவில்லை. நீ எம்முடைய கால்களைத் தொட்டு வணங்க முற்படுதல் வேண்டா. யாம் மறுத்து வெறுத்துக் கூறவும், நீ எம்மை விடாது பின்பற்றித் தொடருதல் வேண்டா. என்னுடைய கைகளைப் பற்றிக்கொண்டு இரந்து கெஞ்சி மன்றாடுதலை விடுக. நீ எம் கைகளைத் தீண்டுதற்கும் தகுதி உடையை அல்லை.

[ஊடல்காரணமாக எழுந்த சினத்தினால், தலைவனைத் தாழ்த்தி ஒருமையினும், தன்னை உயர்த்திப் பன்மையினும் தலைவி குறிப்பிடுகின்றாள்]

(390)

தலைவி : கொத்துக் கொத்தான மாலைகள் நிறைந்த பெரிய தோள்களையும், நஞ்சைக் கக்குகின்ற கூர்மையான வேற் படையினையும் உடைய கொற்றவராகிய நம் தலைவர், தீவினையேன் ஆகிய என்பொருட்டு, எமது வளமனையில் வந்து நிற்கின்ற தன்மை என்னே! நெருநல் இவர், பந்து பயின்ற விரல்களை உடைய பரத்தை ஒருத்தியைப் பலரும் காணுமாறு புனல் ஆட்டுவித்தார். இங்ஙனம் வெளிப்படையாகத் தவறு செய்தனராயினும், தாம் எவ்வகைத் தவறுமே செய்யாத நல்லவர் போல் நடித்தலை மேற்கொண்டு, தலைவர் இங்கு வந்து நிற்கின்றார். இவ்வகைப் போலிச் செயல்களை நம்மாற் பொறுத்தல் அரிது. (391)

தலைவி : மின்னல் போலும் ஒளிமிகுந்த செஞ்சடையின்கண், வெண்பிறையைச் சூடியிருப்பவனும்; நல்ல ஆகூழை உடைய சிறந்த அன்பர்கள், சிற்றின்பத்திற்குக் காரணமான புலன்களைவிட்டு நீங்கிச் சென்று, நினைந்து தியானிக்கின்ற திருவடிகளை உடையவனும் ; ஆகிய சிற்றம்பலவரின், தெற்குத் திசையின்கண் உள்ள பொதிய மலையைச் சார்ந்த எமதுகுடும்பம், மிகமிகத் தாழ்ந்து வறிய சிறியவர்களின் குடும்பமாகும். அதனால் நல்ல ஊர்களை உடைய தலைவனே! முற்காலத்தில் நீ செய்த உண்மை அன்பையும், தலையளியினையும், நாம் விரும்புகின்றோம் என்றாலும், இப்பொழுது உனது திருவருள் எங்களுக்கு இதனின்மேல் வேண்டுவதில்லை. எங்ஙனமோ எம்மை நினைவு கூர்ந்து, நீ இங்கு வந்த இத் துணையே எமக்குப் போதும். (392)

தலைவி : செல்வச் செழிப்பு மிகுந்த மாளிகைகளால் சூழப்பட்ட சிற்றம்பலத்தை உடையவரும், அன்பர்களின் உள்ளத்திற் சென்று தங்கி மகிழ்ந்து கூத்தாடுபவரும்ஆகிய சிவபெருமான், தோற்றுவித்த ஏழு உலகங்களிலும், சிறந்த நாட்டின்கண், சிறந்த நல்ல ஊரில், சிறந்த பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவராக நீர் விளங்குகின்றீர். அத்தகைய பெருநிலையினர் ஆகிய தாங்கள், மிகவும் இழிந்த எங்களைப் போன்றவர்களிடத்தில், இத்தன்மையவாகிய காதல் இன்பச் செயல்களை விரும்புதல், உமக்குச் சிறப்பும் பொருத்தமும் உடையது அன்று! நீர் விரும்பும் பரத்தையர் இடத்திலேயே நீர் செல்லலாம். (339)

தலைவன் : ஒருவகையாலும் திருந்தாத கொடிய பாவியாகிய யான், பிறவித் துன்பத்தினின்று தப்பி உய்யும்படி வந்து தோன்றியருளிய சிற்றம்பலவரின், தெற்கின்கண் உள்ள பொதிய மலையின்பால், ஒரு முயற்சியும்இன்றி வறிதே இருந்த யான், உய்யும்வண்ணம், என் முன்னே வந்து காட்சிதந்து, தன்னுடைய இணைந்த மலர்போலும் கண்களினது உள்ளக் கருத்தை வெளிப்படுத்தி, நாணத்தோடு கூடிய காதற்பார்வையாகிய, இனிய கடைக்கண் நோக்கத்தை முன்னதாக எனக்கு அளித்து, பெரிய தேன்போல இனிமைமிகுந்து, என் நெஞ்சம் உருகும்படி என்னைப் பற்றிப் பிடித்துத் தன்வயமாக்கிக்கொண்ட, நமது பெண் அமிழ்தமாகிய அது, இதோ இங்கிருக்கின்ற இந்தப் பெண் அல்லள். இந்தப் பெண்வடிவம் இதோ இங்கு வந்திருப்பது, ஏதோ ஒரு வஞ்சனையான மாயச் செயலேயாகும். அன்பும் பண்பும் அற்ற இந்தப்பெண் வடிவினை, அந்தப் பழைய சிறந்த தலைவியே என்று நினைத்து, நாம் மயங்கி மருண்டு வருந்துதலிற் பயனில்லை.

[ திருச்சிற்றம்பலக் கோவையார், ஏனைய பிற கோவை நூல்களிற் காணப்படாத ஒரு பெரும் தனித் தெய்விகச் சிறப்பியல்பை உடையது. மாணிக்கவாசகர் வெறும் அகப் பொருளை மட்டுமே பாடாமல், அகப்பொருளில் அருட்பொருளையும் பிணைத்துக் குழைத்து, பெரிதும் சிறப்புறத் திருச்சிற்றம்பலக் கோவையாரினை அருளிச் செய்துள்ளார். ''ஊடல் நீட வாடி உரைத்தல்'' என்னும் அகப்பொருள் துறையில் அமைந்த இச்செய்யுளில், துறைக்குரிய பொருளுடன், சிவபெருமான் அம்மையப்பராக விளங்கும் திறனையும், அவர் தமக்குச் செய்த அருளின் நலனையும் ஒருங்கியைத்துப் பாடியருளியிருக்கின்றார்.

''ஒருவாற்றானும் திருந்தப் பெறாதவனாய், தன்னை அடைவதற்கு எத்தகைய முயற்சியும் செய்யாமற் கிடந்த எளியேன், பிறவித் துன்பத்தினின்றும் தப்பிப் பிழைக்குமாறு, தானே ஞானாசிரியனாக எழுந்தருளி வந்து, தனது இணைமலர்க் கண்களின் இனிய கடைக்கண் நோக்கத்தினை எனக்கு அருளி, பெருந்தேனைப் போன்று இனியதாய், கல்லினும் வல்லென்ற என்னுடைய நெஞ்சமும் நெகிழ்ந்து உருகும்படி 'வா வா என்று என்னைப் பூதலத்தே வலித்து'ப் பிடித்து ஆண்டுகொண்ட, பெண்ணுடன் கூடிய அமிழ்தம் ஆகிய நமது அம்மையப்பர்'' என்னும் பிறிதொரு பொருளும், இச்செய்யுளின்கண் குறிப்பிற் புலப்படுத்தப் பெற்றுள்ளது.

''தோலும் துகிலும்
குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும்
பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்கவளையும்
உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக்
குளிர்ந்தூதாய் கோத்தும்பீ''

என வரும் திருவாசகச் செய்யுளை நினைவூட்டும் முறையில், இந்தச் செய்யுள் அமைந்திருத்தல் அறிந்து மகிழ்தற்குரியது] (394)

தலைவி: இமையவர்களால் வணங்கி இறைஞ்சப்படுபவரும், நுண்ணிய வேலைப்பாடுடைய நல்ல வீரக்கழல் அணிந்த திருவடியை உடையவரும், ஆகிய சிற்றம்பலவரின் தென்றிசைப் பொதிய மலையின்கண், மேகங்கள் தங்கிய இக் குன்றத்தில் சூழ்ந்து செறிந்த இருளின்கண், அருகே வசிக்கின்ற யானைகளை அஞ்சி ஓடும்படி செய்து, சிங்கங்கள் அவ்யானைகள் புகுந்து மறைந்துள்ள இடங்களைத் தேடுகின்ற, கொடிய அஞ்சத்தக்க வழிகளில், தமது வேற்படையையே துணையாகக் கொண்டு வந்து, இயல்பாகிய-நிலை பெற்ற-உண்மையான அன்பை, நம்மிடத்தில் முன்பு செலுத்திய நம் தலைவருக்கு, அவர் இங்ஙனம் மிகவும் பணிந்து இரந்து நிற்கவும், யாம் இவ்வாறு உடன்படாது நிற்கும் நிலை, எவ்வளவு துன்பத்தைத் தரும்? நம்முடைய செயல் பொருத்தமுடையதன்று. இவரை அன்புடன் வரவேற்றுப் புணர்ந்து மகிழ்தலே நம் கடமையாகும். (395)

தலைவி: புதல்வனே! தேன் தங்கிய கொன்றை மாலையை அணிந்த நீண்ட சடையை உடையவரும், இமையவர்களால் வணங்கப்படுபவரும், ஆகிய சிற்றம்பலவரின் தில்லையிலுள்ள, பரத்தையராகிய நல்ல பெண்கள் எல்லோருக்குமே, பொதுவானதாகிய, உனது தந்தையின் எச்சிலாகிய தம்பலத்தைக் கொண்டு வந்தோ, நீ எம்மைச் சிறப்பித்து மகிழ்விப்பது? இந்தத் தம்பலத்தை நினக்குத் தருகின்ற சமயத்தில், நின்னுடைய தந்தை, ஒளியுற்று முறுவல் பொருந்திய நின் சிறிய அன்னையராகிய பரத்தையர்களின் கண்களிற்படாதபடி, நின்னை எவ்வாறு சந்தித்தார்? எவ்விடத்தில் இருந்துகொண்டு, எந்த வகையில், இந்தத் தம்பலத்தை நின்வாயிற் கொடுத்தார்? நின் சிற்றன்னையராகிய பரத்தையர்கள், நின் தந்தையின் செயல் கண்டிருந்தால், அவரைச் சினவாது ஒழிவரோ!

['தம்பலம்' என்பது இந்நாளில் 'தாம்பூலம்' என வழங்கும். தலைவன் தின்ற எச்சில் வெற்றிலை ஆகிய தாம்பூலத்தைப் பெறப் பரத்தைமைப் பெண்கள் பலரும் தம்முட் போட்டியிடுவர். ஆதலின் 'தில்லை நல்லார் பொதுத் தம்பலம்' எனப்பட்டது. 'நல்லார்' என்பது, இங்கு எள்ளற் குறிப்பிற் போந்தது. பெற்றோர்கள் சிலர் தாம் தின்ற எச்சில் வெற்றிலையின் மிச்சிலைத் தம் குழந்தைகளின் வாயில் அளிப்பதும், பின்னர் அக்குழந்தையின் வாயினின்று அதனை மீட்டுத் தாம் பெற்று மகிழ்வதும் உண்டு. அம்முறையில், தலைவன் தன் பரிவின் மிகுதியால் அதனைக் குழந்தைக்கு அளித்தான்; குழந்தை அதனைத் தலைவியாகிய தன்தாய்க்கு அளித்தது. அப்போது அவள் கூறிய முறையில் இச் செய்யுள் அமைந்தது] (396)

அருகிலுள்ளோர்: ''தலைவியாகிய யான் ஊடல் கொண்டு வெகுண்டு, தலைவனின் மலைபோன்ற மார்பகத்தில் உதைத்து மிதித்தேன். ஆனால் அவனோ, வில்போன்ற அழகிய புருவத்தை உடைய, என் தங்கையாகிய பரத்தை உறையும் இடம் என்று கருதி, தன் மார்பில் என் கால்கள் படாதபடி, தனது தலையைக் குனிந்து என்னை வணங்கி நின்றான். வேற்படையை உடைய இத் தலைவனைப்போல வஞ்சகம் மிக்க கள்வர் ஒருவரும் இரார்'' என்று தலைவி தவறாக நினைத்துக் கொண்டாள். யாழ் முதலிய கலைகளில் தேர்ச்சிபெற்ற அழகியாகிய, இந்தத் தலைவியின் கண்கள் அழுதுபுலம்பி, கண்ணீர்த் துளிப் பெருக்கு ஆகிய முத்து மாலைகளைச் சிதறின. இவள் கால்களால் மார்பில் உதைத்ததைத் தன் பணிவு தோன்றத் தலைவன் தன் தலையால் பணிந்து ஏற்றுக் கொள்ளவும், அதனை அவன் அன்புப் பணிவின் அறிகுறி என்று உணராமல், பரத்தையர்பால் அவன் கொண்டுள்ள பாசத்தின் நேச விளைவு என்று தவறாகப் புரிந்துகொண்டு, இவள் வீணே ஊடல் கொள்ளுகின்றாள். ஊடல் கொள்வதற்குக் காரணம் ஏதுமே வேண்டாமல், இவள் எதற்கெனினும் ஊடல் கொண்டுவிடுவாள் போலும்!

[''மனைவி உயர்வும் கிழவோன் பணிவும், நினையுங் காலைப் புலவியுள் உரிய'' என்பது தொல்காப்பிய நூற்பா. ஊடற் காலத்தில் தலைவன் தலைவியைப் பணிந்து வணங்குதல் செய்யலாம் என்பது இதன் கருத்து. ஆதலின் தலைவி மார்பில் உதைப்ப, தலைவன் அதனைத் தலையால் ஏற்றான். தனது மார்பின்கண் உள்ள நெஞ்சகத்தில், தனதுகாதற் பரத்தை இடங்கொண்டிருத்தலின், அவள்மீது தன்கால் படாதிருத்தற் பொருட்டே, தான் காலால் உதைத்ததனைத் தலைவன் பணிந்து வணங்கித் தலையால் ஏற்றான் என்று, தலைவி

தவறாகப் புரிந்து கொண்டு, மேலும் ஊடல் கொண்டாள் என்பது கருத்து.

கொள்ளைப்போர் வாட்கண் ணாள்அங்கு
ஒருத்தி,ஓர் குமரன் அன்னான்,
வள்ளத்தார் அகலம் தன்னை
மலர்க்கையாற் புதைப்ப நோக்கி,
உள்ளத்தார் உயிர்அன் னாள்மேல்
உதைபடும் என்று, நீநின்
கள்ளத்தாற் புதைத்தி என்னா
முன்னையிற் கனன்று மிக்காள்!

—கம்பர், உண்டாட்டு, 59.

(397)

தலைவன் : தவழா நிற்கும் இளையகாளை போன்ற புதல்வனை உடைய தலைவியே! கங்கை யாறு பரந்த சடைமுடியை உடைய சிற்றம்பலவர் படைத்த உலகங்கள் எல்லா வற்றையும் யாம் பெற்றாலும், ஞாயிற்றி னுடைய வளவிய கதிர்கள் வெதுப்பிய புழுதி பரந்த கொடிய காட்டு நெறியிற் சென்று, இந்தச் செறிந்த மெல்லிய முலைகள், எம்முடைய மார்பின்கண் வந்து நெருக்க, நெறியால் சிறிய ஓர் ஊரின்கண், மான்தோலாகிய படுக்கையில் முன்னொருகால் ஓர் இரவில் துயின்ற, சிறிய துயிலின் இன்பத் திற்கு ஒப்பானதொரு துயிலின் இன்பத்தை, யான் கண்டிலேன். அதனை நீ இப்போது நினைத்து உணர முடிகின்றதா?

[சிற்றம்பலவராகிய அண்டர் படைத்த அண்டங்கள் முழுவதையும் சேர்த்துத் தனி முடி கவித்துக் கொண்டு ஆளுகின்ற அரசாட்சியால் வரும் இன்பமுங்கூட, முன்னொருகால் நாம் ஒருங்குசேர்ந்து மான்தோற் படுக்கையில் துயின்று பெற்ற இன்பத்திற்கு ஒப்பாகாது என்பது கருத்து. தமக்குத் தக்க போதிய படுக் கையும் இடமும் அன்மையினால், 'சிறுதுயில்' எனப்பட்டது. துயின்றபொழுதினும், துயிலா திருந்தபொழுது பெரிதும் நெடிதும் ஆதலின், சிறுதுயில் எனப்பட்டது எனினும் அமையும். முன்னர் நிகழ்ந்தது கூறுவானாய்த் தலைவியின் உள்ளத்தில் எழுந்த ஊடலைத் தணிவிக்கத் தலைவன் முயன்றான் என்பது, இதன் கருத்து]

(398)

தலைவி: (தலைவன் முன்னர் நிகழ்ந்ததனைக் கூறி, தலைவியின் ஊடல் தீர்த்துத் தழுவி அணைந்து இன்புற்ற பிறகு, தலைமகள் 'இங் ஙனமே பிறர்க்கும் நீ இன்பம் நல்குகின்றாய் போலும்' என்று வினவ, அப்பொழுது தலை வன் 'நின்னை ஒழிய யான் வேறு ஒருத்தியை யும் அறியேன்' என்று கூறினான். அப்போது தலைவி கூறுவதாக அமைந்தது இச் செய்யுள்)

''நின் பரத்தை ஒருத்தி தெருவழியே செல்லா நின்றவள், நம் வாயிற்கண் சிறிது நேரம் நின்றாள்; அங்குத் தேருருட்டி விளை யாடிக் கொண்டிருந்த நம் புதல்வனைக் கண்டு, அவனது உறுப்பு நலங்களை நோக்கி வியந்து, நின்னுடைய புதல்வனோ அல்லனோ என்று முதற்கண் ஐயுற்றாள்; பின்னர் நின் புதல் வனே என்று தெளிந்து, நின்பாற் கொண்ட அன்பினால், நின் புதல்வனை எடுத்துத் தழுவி மகிழ்ந்து கொண்டிருந்தாள். தன் இயலையும் செயலையும் யாரேனும் கண்டுவிடுவரோ, என்ற அச்சமும் ஐயமும் அவளுக்கு இருந்தன. அந்நிலையில் அவளைக் கண்டுகொண்ட யான், ''நீ சிறிதும் ஐயமோ அச்சமோ கொள்ளுதல் வேண்டா! இவன் உனக்கும் மகனே! இவ னொடு உன்உறவு, உண்மையான நல்ல உறவே; இதுவும் உனக்குரிய இல்லமே; இங்கே நீ உள்ளே வருக'' என்று அழைத்தேன். கையில் மானை ஏந்திய சிற்றம்பலவனின் புலியூரைப் போன்று, சிறந்த நல்ல அழகியாகிய அவள், பெரிதும் நாணமுற்றுச் சென்றுவிட்டாள். அத னால், யான் நினது அன்பிற்குரிய பரத்தையை அறிவேன்; யான் அவளை அறியேன் என்று நினைத்துக்கொண்டு, நீ பொய்யான புனைந் துரைகளைக் கூறுதல் வேண்டா.

[மாணிக்கவாசகர் சங்க காலத்தை அடுத்துத் தோன்றியவர். சங்க காலப் பண் பாட்டினை, அழியாமற் பாதுகாக்க விரும்பி முயன்றவர். அதற்காகவே சங்ககால இலக் கியக் காதல் உணர்ச்சியுடன், சமய காலக் கடவுள் உணர்ச்சியையும் ஒருங்கியைத்து, இணைத்துப் பிணைத்துத் திருச்சிற்றம்பலக் கோவையார் பாடினார். அதனால் திருச்சிற் றம்பலக்கோவையாரில், சங்ககாலப் பாடல் களின் சாயலும் நடையும் கருத்தும் தகவுற அமைந்து திகழும். அதற்குரிய இனிய சான் றாக இச்செய்யுள், அழகுறத் திகழ்கின்றது. அகநானூற்றுப்பாடல் (16) ஒன்றின், அழகிய சுவைமிக்க கருத்தினைத் தழுவி, இச் செய்யுள் இயன்றுள்ளது:

''பரத்தையர் சேரியினின்றும் போந்த தலைமகன், தன்பாற் புலவி கொண்ட தலைவி யின்பால், 'நின்னை யன்றி யான் பிறர் ஒரு வரையும் அறியேன்' என்று பொய் கூறினா னாக, 'இங்ஙனம் நீ பொய் கூறுவது எற்றுக்கு? இன்று காலை யாவரும் விழையும் நம் பொலந் தொடிப் புதல்வன் தெருவில் தேர் விளையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது அவ்வழியே ஒருத்தி வந்தாள். வந்தவள், அவனோடு நின் னிடையுள்ள உருவ ஒப்புமைகள் பலவும் கண்டு களிகூர்ந்து சுற்றுமுற்றும்பார்த்தாள். பின்னர்த் தன்னைக் காணுநர் யாரும் இலர் எனக் கருதி, அவனைக் 'குழந்தாய்! என்னுயிரே! வருக!' என்றுகூறி எடுத்துத், தன் மார்போடு அணைத் துக் கொண்டு, மிகவும் மகிழ்ந்து கொண்டிருந் தாள்.

அதுகாலைத் தற்செயலாக, யான் குழந் தையைத் தேடிக்கொண்டு, அங்குச் செல்ல நேர்ந்தபோது, யான் அவளைக் கண்டேன். அதனால் அவள் நெஞ்சம் துணுக்குற்றது. முகம் சிறிது மாறுபட்டு, நாணி மயங்கி நின்றாள். காரணமின்றி என்னைக் கண்டு துணுக்குற்று நாணி மயங்கி நின்றமையின், 'அவள் யாவள்?'

என நுண்ணிதில் ஓர்ந்து நோக்கித் தெளிந்து கொண்ட யான், 'குறுமகளே! ஏன் மயங்கு கின்றாய்? நீ தானும் இவனுக்கு ஒரு தாயே ஆகற்பாலை. இங்கே வருக! என்று அவளை அழைத்தேன். அவளும் விரைந்தோடி வந்து என்னைத் தழுவிக்கொண்டு, களவு உடம்பட்ட வர்களைப் போலத் தலைகவிழ்ந்து நிலங் கிளைத்து நாணி நின்றாள்.

அங்ஙனம் நின்ற அவளது நிலையும் இயல் பும் கண்டு, 'பொற்பும் கற்பும் மற்றும் பிற நற்பண்பும் உடைய இவள், நின் புதல்வனுக்குத் தாயாகும் முறைமையினளாதல் பொருத்த முடையதேயாகும்' என்று நினைந்து, உள்ளம் தெளிந்து, மகிழ்ச்சியுற்றேன். அவளை விரும்பிப் பாராட்டினேன். இவ்வாறு நினது பரத்தையை யான் நேரே கண்டறிந்து கொண்டுவிட்டேனாக வும், என்னிடம் நீ 'யான் யாரையும் அறி யேன்' என்று பொய்கூறி ஏமாற்றக் கருதுவது என்னை? ''என்னும் பொருளமைய,

''நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதின் அல்லி அயலிதழ் புரையும்
மாசில் அங்கை மணிமருள் அவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப்
புதல்வனைத்
தேர்வழங்கு தெருவில் தமியோற் கண்டே,
கூர்எயிற்று அரிவை குறுகினள் யாவரும்
காணுநர் இன்மையிற் செத்தனள் பேணிப்,
பொலங்கலம் சுமந்த பூண்தாங்கு இளமுலை
வருக மாளஎன் உயிர்எனப் பெரிதுவந்து
கொண்டனள் நின்றோட் கண்டுநிலைச்
செல்லேன்;

மாசில் குறுமகள் எவன் பேதுற்றனை?
நீயும் தாயை இவற்கென, யான்தற்
கரைய வந்து விரைவனென் கவைஇக்
களவுடம் படுநரிற் கவிழ்ந்து நிலம்கிளையா,
நாணி நின்றோள் நிலைகண்டு யானும்
பேணினென் அல்லனோ? மகிழ்ந! வானத்து
அணங்கருங் கடவுள் அன்னோள், நின்
மகன்தாய் ஆதல் புரைவதாங் கெனவே!''

என்று, அகநானூற்றில் சிறந்ததொரு பாடல் வருகின்றது! அழகிய இனிய அப்பாடலை முழு வதும் தழுவி,

''ஐயுற வாய், நம் அகன்கடைக்
கண்டு, வண் தேர்உருட்டும்
மையுறு வாட்கண் மழவைத்
தழுவ, மற் றுன்மகனே,
மெய்யுற வாம், இதுன் இல்லே,
வருகென வெள்கிச் சென்றாள்,
கையுறு மான்மறி யோன்புலியூர்
அன்ன காரிகையே''

எனத் திருக்கோவையாரின்கண் வரும் அழகிய இனிய பாடல், மாணிக்கவாசகரது சங்கநூற் பயிற்சியின் மேன்மையினையும் ஈடுபாட்டினை யும், இனிது விளக்கும் சான்றாக நிலைபெறும்]
(399)

தோழி: தலைவியே! நம்முடைய அரு மைத் தலைவன், கேட்காமலேயே எதனையும் தருதலால் மேகம் போல்வான்; வேண்டிக் கேட்டுக்கொள்ளக் கொடுக்கும் தன்மையால், அழகிய கற்பகமரம் போல்வான்; நுண்ணிய சிறந்த கல்வி உடையவன் ஆதலால், கற்று வல்ல அறிஞர்களுக்குச் சிறந்த உசாத்துணை யாகத் திகழ்வான்; இசைக்கலைத் தேர்ச்சியி னாலும், கலந்து பழகும் நட்புரிமையினாலும், பாணர்களுக்குச் சுற்றம்போல்வான்; அவரவர் நினைத்ததனைக் கொடுப்பதனால் சிறப்பு மிக்க நல்ல சிந்தாமணி போல்வான்; அழகிய தில்லையின்கண் உள்ள சிவபிரானின் திரு வடிக்கு மாலையாக அமைந்து, அவனால் அணி யப்படும் கொன்றை மலரின் தன்மையை உடை யான்; தகுதி மிக்க சான்றோர்களுக்கு அழி வற்ற செல்வம் போலப் பயன்படுதலால், சங்க நிதி போல்வான். நண்பர்களுக்கும் பகைவர் களுக்கும் தவறாது பயன் கொடுத்தலால், இறையருள் ஆணையாகிய விதிக்குச் சமமா வான். சுற்றத்தினர்க்கு வேண்டும் நலங்கள் பலவும் செய்து உதவுவதால், அருகில் உள்ள ஊருணி என்னும் குளம் ஒப்பான். இன்னார் இனியார் என்னும் பாகுபாடு இன்றி, எல்லார்க் குமே ஊதியம் எனவிளங்கி, நலம் விளை வித்துப் பயன்படுவோன், நமது தலைவன்.

[இத்தகைய நம் தலைவன், அன்பினா லன்றித் தனது அருட்டன்மையால் பரத்தை யர்க்கும், தலையளி செய்யும் இயல்பினனா வான். ஆதலின், தலைவனது இயற்கைப் பண்பு நலனை அறிந்து கொள்ளாமல், புறப் பெண்டிரைப் போல, நாம் அவனோடு புலந்து ஊடல் கொள்ளுதல் பொருந்தாது. தலைவன் வரும்பொழுது எதிர்தொழுது வரவேற்றும், போகும்பொழுது புறந்தொழுது உய்த்தும், புதல்வரை ஈன்று புரந்தந்து இல்லறம் புரிந்து ஒழுகுதலே, நமக்குக் கடமையாகும். ஆதலின் நீ தலைவன்பால் புலவி கொள்ளாது, அவனை ஏற்றுப் போற்றிக் கலந்து மகிழ்ந்து வாழ்வா யாக! என்பது, இப்பாடலின் திரண்டகருத்து.

இவ்இறுதிப் பாடல் ஒரு சிறந்த தலைமகன் பால் அமைந்திருத்தற்குரிய பலவகைப் பண்பு நலங்களையும் ஒருங்கு தொகுத்து உணர்த்துகின் றது. இங்ஙனம் தலைவியின் பண்பு நலங்களைப் புகழ்ந்து பாராட்டுதல், கூத்தர் முதலிய அகத் திணை மாந்தர்க்குரிய இனிய செயலாகும். இதனைத் 'தொல்லவை உரைத்தலும், நுகர்ச்சி ஏற்றலும், பல்லாற்றானும் ஊடலில் தணித்த லும், உறுதி காட்டலும், அறிவு மெய்ந் நிறுத் தலும், ஏதுவின் உணர்த்தலும், துணியக் காட் டலும் அணிநிலை உரைத்தலும் கூத்தர்மேன'' எனவரும் தொல்காப்பிய நூற்பாவால் இனிது உணரலாம்].
(400)

* *

—திருச்சிற்றம்பலக் கோவையார்
கருத்துத் தொகுப்புச் சுருக்கம்
முற்றிற்று.

# அத்வைத தத்துவம்

''வேதாந்த வித்தகர்''

திரு டாக்டர் டி. எம். பி. மகாதேவன், எம்.ஏ., பி.எச்டி.,

அத்வைதம் என்பது வேதாந்த மதங்களுள் ஒன்று. ''பிரமம் இரண்டற்ற மூலப்பொருள்; பலவாகக் காணப்படும் உலகம் பொய்த் தோற்றம்; சீவன் பிரமத்தைவிட வேறன்று'' என்று அத்வைதம் கூறுகிறது. அத்வைதம் என்ற சொல்லுக்கு இரண்டற்றது என்பது பொருள். ஆசாரிய சங்கரர் இம்மதத்தின் கொள்கைகளைத் தாம் வரைந்த நூல்களில் விளக்கியுள்ளார். இம்மதம் அவர் இயற்றிய தன்று. உபநிடதங்களில் பலவிடங்களில் அத்வைதம் போதிக்கப்படுகின்றது. முக்கியமாக யாக்ஞவல்கியரின் உபதேசங்களில் இதைக் காணலாம். சங்கரருக்கு முன்வந்த கௌடபாதர், அத்வைதக் கொள்கைகளை யுக்தி களைக்கொண்டு நிலைக்கச் செய்தார்.

ஏனைய வேதாந்த மதங்களைப்போல அத்வைதமும், மூன்று பிரஸ்தானங்களை மூல நூல்களாகக் கருதுகின்றது. அவையாவன: உபநிடதங்கள், பிரமசூத்திரம், பகவத் கீதை என்பன. கௌடபாதர் மாண்டூக்கிய உபநிடதத்திற்கு வியாக்கியானமாகக் காரிகை யொன்றை இயற்றியுள்ளார். சங்கரர் முக்கியமான உபநிடதங்களுக்கும், மற்ற இரண்டு பிரஸ்தானங்களுக்கும் பேருரை எழுதியுள்ளார். அத்வைதத்தைச் சுருக்கமாகவும் விளக்கி, அவர் வரைந்துள்ள விவேக சூடாமணி, உபதேச ஸகஸ்ரி முதலிய தனி நூல்களும் உண்டு. பிரகதாரணியகம், தைத்திரீயம் முதலிய உபநிடதங்களுக்குச் சங்கரர் எழுதிய உரைகளுக்கு, அவருடைய சீடரான சுரேசுவரர் வார்த்திகங்கள் செய்துள்ளார். நைஷ்கர்மிய சித்தி என்பது சுரேசுவரருடைய மற்றொரு நூல். சங்கரரின் இன்னொரு சீடரான பதுமபாதர் தம் குருவின் சூத்திர பாடியத்திற்கு ஒரு வியாக்கியானம் எழுதினார். அவர் எழுதியதில் முதல் ஐந்து பாதங்களுக்குள்ள வியாக்கியானமே அழியாமல் வந்திருக்கிறது. ஆகையால் அதற்குப் பஞ்ச பாதிகை என்ற பெயர் ஏற்பட்டது. இதற்குப் பிரகாசாத்மன் என்பவர் பஞ்சபாதிகா விவரணம் என்ற ஒருஉரை வரைந்துள்ளார். இதை அடிப்படையாகக் கொண்டு விவரணம் என்ற மரபு அத்வைதத்தில் தோன்றியது.

விவரணக் கொள்கைகளைத் திரட்டி விவரணப் பிரமேய சங்கிரகம் என்ற நூலைப் பாரத தீர்த்த வித்யாரணியர் இயற்றினார். இவருடையதே பஞ்சதசீ என்னும் காவியமும். அத்வைதத்தில் சங்கரருக்குப்பின்வந்த மற்றொரு மரபு பாமதீ என்பது. இதற்கு மூல நூல் வாசஸ்பதி மிசிரர் சங்கரருடைய சூத்திர பாஷியத்திற்கு எழுதிய பாமதீ என்னும் வியாக்கியானம். அமலானந்தர் எழுதிய கல்பதரு பாமதீயின் விளக்கம். இதற்கு உரை, அப்பைய தீட்சிதரின் கல்பதருபரிமளம் என்பது. அத்வைத மதத்திலுள்ள பேதங்களை வகுத்துச் சித்தாந்த லேச சங்கிரகம் என்னும் நூலை அப்பைய தீட்சிதர் இயற்றினார். ஏனைய அத்வைத நூல்களின் முக்கியமான சில நூல்கள்: சர்வஞ்ஞாத்ம முனியின் சம்க்ஷேபசாரீரகம்; அர்ஷரின் கண்டன கண்ட காத்யம்; சித்சுகரின் தத்வப்பிரதீபிகை; மதுசூதன சரசுவதியின் அத்வைத சித்தி; தர்மராஜரின் வேதாந்த பரிபாஷை. சதானந்தரின் வேதாந்தசாரம்! சமஸ்கிருதத்தைத் தவிர மற்ற மொழிகளிலும் வேதாந்த நூல்கள் உண்டு. இந்தியில் நிச்சலதாசர் எழுதிய விசார சாகரம், விருத்திப் பிரபாகரம் என்னும் நூல்களும், தமிழில் தாண்டவராய சுவாமிகள் எழுதிய கைவல்லிய நவநீதம் என்னும் நூலும், மக்களுக்கு மிகவும் உபயோகமுள்ளவை.

அத்வைத மதத்தில் ஆறு அளவைகள் அல்லது பிரமாணங்கள் ஒப்புக் கொள்ளப்படுகின்றன. அவையாவன: பிரத்தியட்சம், அனுமானம், உபமானம், அர்த்தாபத்தி, அனுபலப்தி, சப்தம் என்பவை.

(1) பிரத்தியட்சப் பிரமாணம் என்பது சாதாரணமாக இந்திரியங்களுக்கும், விஷயங்களுக்கும் உள்ள சேர்க்கை. இதனால் ஏற்படும் ஞானம் பிரத்தியட்சஞானம். உதாரணமாகக் கண்களுக்கும் ஒரு விஷயத்தின் உருவத்திற்கும் சம்பந்தம் உண்டாகும்போது காட்சி யேற்படுகின்றது. வெளியேயுள்ள பொருள்களை யறிவதற்குத் தான் இந்திரியங்களின் உதவி வேண்டும். நம் மனத்திலுள்ளவற்றை உணர்வதற்கு மனமேதான் காரணம். இதற்கு மானதப் பிரத்தியட்சம் என்று பெயர்.

(2) அனுமானம் என்பது ஒரு குறியின்ஞானத்தின் வாயிலாக, அது எதைக் குறிக்கின்றதோ

அதையறிவது. புகையைக் கண்டு, நெருப்பை அனுமானிக்கிறோம். குறிக்கு ஏதுவென்றும், குறிக்கப்படும் பொருளுக்குச் சாத்தியம் என்றும் பெயர். இவ்விரண்டுக்கும் உள்ள சம்பந்தம் வியாப்தி. விரிவாகவுரைக்கப்படும் அனுமானத்திற்கு ஐந்து அவயவங்கள் உள்ளன. உதாரணமாக: குன்றில் நெருப்பு உள்ளது (பிரதிஞ்ஞை); அங்கே புகை யிருப்பதால் (ஏது); எங்கெங்குப் புகையுளதோ அங்கங்கு நெருப்புளது, அடுக்களையிலுள்ளதுபோல (உதாரணம்); நெருப்பால் வியாபிக்கப்பட்ட புகை குன்றில் உளது (உபநயம்); ஆகையால் குன்றில் நெருப்புளது (நிகமனம்).

(3) உபமானம் என்பது இரண்டு பொருள்களை ஒப்பிட்டுப் பார்ப்பது. இதனால் ஏற்படும் ஞானம் உபமிதி. கவயம் என்ற விலங்கு பசுவைப் போன்றது என்று ஒருவன் கேள்வியினால் தெரிந்து கொள்கிறான். பின்னர் வனத்திற்குச் சென்று கவயத்தைப் பார்க்கிறான். அப்பொழுதுதான் காணும் விலங்கைப் போலுள்ளது பசு என்று உணர்கிறான்; இது உபமிதி ஞானம்.

(4) அர்த்தாபத்தி என்பது ஒரு விஷயம் நேரிடையாக விளங்கவில்லையானால், அதை விளக்கக்கூடிய ஒன்றைக் கற்பிப்பது. ஒருவன் பகற்பொழுதிலே சாப்பிடுவதில்லை; ஆனால் இளைக்காமல் இருக்கிறான். இவ்விரண்டையும் பொருத்துவதற்காக ''அவன் இரவில் உண்கின்றான்'' என்று ஊகிக்கிறோம்.

(5) அனுபலப்தி என்பது ஒரு பொருளின் இன்மையை உணர்வது. ''தரைமீது குடம் இல்லை'' என்று குடத்தின் இன்மையை அனுபலப்தி மூலம் அறிகின்றோம்.

(6) சப்தம் என்பது கேள்வி ஞானம். பதங்களின் சேர்க்கைகளாகிய வாக்கியங்களினின்று அறிவு ஏற்படுகின்றது. சப்தப் பிரமாணம் மற்றப் பிரமாணங்களைவிட முக்கியமானது; ஏனெனில், ஆத்ம ஞானம் உபநிடத வாக்கியங்களிலிருந்துதான் ஏற்படவேண்டும். மீமாம்சகர்கள் வேதங்களின் தாற்பரியம் கர்மம் என்று வாதிக்கின்றார்கள். ஏனென்றால், அவர்களுடைய கொள்கைப்படி செயலையொட்டியே ஒரு வாக்கியத்திலுள்ள பதங்கள் பொருளைத் தெளிவுறுத்துகின்றன. வேதாந்திகளோ என்றால், செயலோடு சம்பந்தப்படாத ஒரு பொருளையும் வாக்கியத்தினின்று அறியலாம் என்கிறார்கள். மிகவும் ஒளிபெற்றவன் சந்திரன் என்றபோது, சந்திரனின் சொரூபத்தை உணர்கிறோம்; இங்குச் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. உபநிடதங்கள், ஆத்ம பிரம்ம வஸ்துவை இவ்வாறே உணர்த்துகின்றன.

அறிவு என்ற வியவகாரத்தில் நான்கு கூறுகள் உள்ளன. (1) அறிபவன் (2) அறியப்படும் பொருள், (3) அறியும் வழி (4) அறிவு. இந்நான்கும் ஒரே ஆத்ம வஸ்துவின் பேதங்கள் என்பது அத்வைதத்தின் கொள்கை. ஆத்ம சைதன்னியம் அந்தக்கரணத்தில் பிரதிபலித்து, அறிபவன் (பிரமாதா) என்ற பெயரையடைகின்றது. அறியப்படும் பொருளிலும் அதே சைதன்னியம் உள்ளது (விஷயம்). அஞ்ஞானத்தால் இவ்விரண்டும் வேறாகக் காணப்படுகின்றன. பிரமாணவியவகாரத்தால், இவ்விரண்டிற்கும் சம்பந்தம் ஏற்படுகின்றது. இதை ஏற்படுத்தும் கருவி விருத்தியென்னும் மனத்தின் பரிணாமம். விருத்தியிலும் (பரிணாமம்) சைதன்னியம் விளங்குகின்றது. விருத்தியின் வியாபாரத்தினால் ஞானம் (பிரமிதி) உதிக்கின்றது. இதுவும் ஆத்ம சைதன்னியமே. இவ்வாறு பிரமாண வியவகாரத்தை ஆராய்ந்தாலும்கூட ''ஆத்மா வொன்றே உளது; அதன் சொரூபம் ஞானம்'' என்பது விளங்கும்.

இனி, உண்மை எது, பொய் எது என்று விசாரிப்போம். உண்மை என்பது ஞானத்தின் தன்மை. ஒரு ஞானம் பொய்யாவது, ஞானத்தின் வெளியேயுள்ள சில சந்தர்ப்பங்களினால் ஆகும். இதை சம்ஸ்கிருதத்தில் ''ப்ரமாணம்'' ஸ்வத: அப்ர மாண்யம் பரத'' என்பார்கள். பொய்ஞ்ஞானம் என்பதே அஞ்ஞானம். முத்துச் சிப்பியை வெள்ளியென்று மதிப்பது அஞ்ஞானத்தால். அஞ்ஞானத்தின் விஷயத்தில் சொரூபத்தைப் பற்றிய விவாதம் இந்திய தரிசனங்களிடையே உண்டு. (1) பௌத்த மதத்தின் ஒரு சாராரான சூனிய வாதிகள், இல்லாதது தோன்றுகின்றது என்று கூறுகிறார்கள் (அஸத்க்யாதி). (2) பௌத்த மதத்தின் மற்றொரு சாராரான விஞ்ஞான வாதிகள், உள்ளே விஞ்ஞான ரூபமாயுள்ள பொருள் தவறாக வெளியே தோன்றுகின்றது என்கிறார்கள் (ஆத்மக்யாதி) (3) மீமாம்சை மதத்தின் ஒரு சாராரான பிரபாகரர்களும், சாங்கியர்களும் இவ்வாறு உரைக்கின்றனர். ''இது வெள்ளி'' என்று சொல்லும் போது, இது என்ற ஞானமும், வெள்ளியென்ற ஞானமும் தனித்தனியே உண்மைதான். இது என்பதை நேரிடையே பார்க்கிறோம். முன் பார்த்த வெள்ளியை நினைவு கூர்கின்றோம் (ஸ்மரிக்கின்றோம்). தவறாக இவ்விரண்டையும் சேர்த்து ''இது வெள்ளி'' என்று நினைக்கிறோம். இதுவே அஞ்ஞானம் (அக்யாதி). (4) மீமாம்சை மதத்தின் மற்றொரு சாராரான பாட்டர்களும் நையாயிகர்களும் பொய்யென்பது ஒன்றை மற்றொன்றாக மதிப்பது என்று கருதுகிறார்கள். கடையிலுள்ள வெள்ளியை இங்கே காண்கிறோம். இதற்குக் காரணம் முத்துச் சிப்பிக்கும், வெள்ளிக்கும் உள்ள ஒப்புமை. சாதிருசியம் (அன்யதாக்யாதி). (5) அத்வைதிகள் இவ்வாறு பகர்கின்றனர்:- பொய்யாகத் தோன்றும் வெள்ளி உள்ளதும்அன்று, இல்லாததும் அன்று. அது தோன்றுவதால், அது இல்லை என்று சொல்லிவிடலாகாது. முத்துச் சிப்பியின் உண்மை ஞானம் உதயமாகும்போது, வெள்ளி மறைந்துவிடுவதால், அதை உள்ளது என்றும் கூறமுடியாது. ஆகையால் அது அநிர்வசனீயம் (விவரிக்க முடியாதது); அவித்தையினால் உற்பத்தி செய்யப்பட்டது; ஞானத்தினால் அழிவையடைவது (அநிர்வசனீயக்யாதி). க்யாதி என்பது பொய்யைப் பற்றிய வாதம்.

உண்மையின் இலக்கணம் ''என்றும் உள்ளது; காலம் முதலிய அளவிற்கு உட்படாதது'' என்பதாம். இவ்விலக்கணத்தின்படி பார்த்தால், பிரமம் அல்லது ஆத்மா வொன்றே உண்மை. இதற்குக் குணங்கள் இல்லை. குறிகள் இல்லை. இது சொல்லுக்கும் மனத்துக்கும் எட்டாதது. ஆகையால்தான் உபநிடதங்கள் இது அன்று, (நேதிநேதி) என்று, விலக்கல் வாயிலாகப் பிரமத்தின் சொரூபத்தைப் போதிக்கின்றன. இதுவே நிர்க்குணப் பிரம்மம். நம்முடைய புத்திக்குச் சகுணமாக (குணங்களோடு கூடியதாக)த் தோன்றுகிறது. இந்த நிலையில் பிரமம் உலகத்திற்குக் காரணம். சகுணப் பிரமம் அல்லது ஈசுவரன் உலகிற்கு நிமித்த காரணம் மாத்திரம் அல்ல; உபாதான காரணமும் அப்பொருளே. பிரமத்தினிடமிருந்து உலகம் பிறக்கின்றது; பிறந்தபின் அதனுள்ளே அடங்குகின்றது. ஆனால் உலகம் பிறப்பதும், நிலைப்பதும், அடங்குவதும் உண்மை அல்ல. பால் தயிராக எவ்வாறு மாறுகிறதோ, அவ்வாறு பிரமம் உலகாகப் பரிணமிப்பது கிடையாது. கயிற்றினிடத்தே பாம்பு தோன்றுவது போல, பிரமத்தை ஆதாரமாகக் கொண்டு உலகம் தோன்றுகிறது. இந்தக் கொள்கைக்கு விவர்த்தவாதம் என்று பெயர். அதாவது பிரபஞ்சம் மாயை அல்லது மித்யை (பொய்த்தோற்றம்) என்பதாகும்.

உலகம் மாயையென்று சொல்வதால் அத்வைதத்திற்கும் சூனியவாதத்திற்கும் வேறுபாடில்லை என்று சிலர் கருதுகின்றனர். அது தவறு. சூனியவாதம் ''உண்மை என்பது ஒன்றுமில்லை'' என்று கூறுகின்றது. அத்வைதம் ''பிரமம் ஒன்றே உண்மை'' என்று போதிக்கிறது. ''பாம்பும் உண்மையன்று, கயிறும் உண்மையன்று. இல்லாதது வியவகாரத்தில் கயிறாகவும், பிரமத்தில் பாம்பாகவும் தோன்றுகிறது''-இது சூனியவாதம். ''உண்மை பிரம்மம் ஒன்றே. இது வியவகாரத்தில் கயிறு முதலியனவாகவும், பிரம்மத்தில் பாம்பு முதலியனவாகவும் தோன்றுகிறது''- இது அத்வைதம். இத்தோற்றத்திற்குக் காரணம் மாயை, ஒரு பாவ பதார்த்தம். அதாவது அது ஞானத்தின் அபாவம் அன்று; அது மித்யா ஞானம். மேலும் அது அனாதி. அதாவது ஆதியற்றது. காலம் மாயையின் கார்யமான படியால், மாயை எப்பொழுது தோன்றிற்று என்னும் கேள்விக்கு இடமில்லை. ஆகையால் மாயை அனாதி. ஆனால் அது நித்தியமன்று. நித்தியமான பொருள் பிரமம் ஒன்றே! மாயை எவ்வியல்புடையது என்று வினவுங்கால், நாம் ஒரு முடிவுக்கும் வரமுடியாது. அது சத்தும் அன்று, அசத்தும் அன்று. ஆகையால், அது அநிர்வசனீயம் என்று கூறப்படுகிறது. அது எத்தகையது என்று சொல்ல இயலாது. ஆனால் ஞானம் உதயமாகும்போது, எவ்வாறு சூரியன்முன் இருள் நிலைக்காதோ, அவ்வாறு மாயை நில்லாது மறைந்துவிடுகிறது.

அவித்யை அல்லது அஞ்ஞானத்தினால், சீவன் தான்வேறு பிரமம்வேறு என்று கருதுகிறான்; தானல்லாதவற்றைத் தானாகப் பாவிக்கிறான். இதற்கு அத்தியாசம் என்று பெயர். ஆத்ம தருமங்களை அனாத்மாவிலும், அனாத்ம தர்மங்களை ஆத்மாவிலும் ஏற்றி, ஒன்றை மற்றொன்றாகப் பாவிப்பது அத்தியாசம். இதனால்தான் ''நான் இது'' ''என்னுடையது இது' என்ற வியவகாரம் ஏற்படுகிறது. மகன், மனைவி உறவினர் முதலியவர்கள் இன்புற்றோ துன்புற்றோ இருந்தால் ஒருவன் ''நான் இன்புற்றுள்ளேன், நான் துன்புற்றுள்ளேன்'' என்று கருதுகிறான். அதுபோலவே, தேகம் ,இந்திரியங்கள், மனம் முதலியவற்றின் தருமங்களை ஆத்மாவின்மீது ஆரோபிக்கிறோம். ''நான் பருத்திருக்கிறேன், இளைத்திருக்கிறேன், நான் குருடு, செவிடு; நான் எண்ணுகிறேன், விரும்புகிறேன்'' என்று தவறாக நாம் மதிக்கிறோம் உண்மை இதுவன்று. ஜீவாத்மாவின் வாஸ்தவ சொரூபம் பிரமம். இந்த உண்மையைத் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்கள் போதிக்கின்றன.

இம் மகாவாக்கியங்கள் சீவனுக்கும் பிரமத்துக்கும் உள்ள அபேதத்தைப் போதிக்கின்றன. தத் த்வம் அசி என்ற வாக்கியத்திற்கு, ''அது நீ, நீஅதுவாய் இருக்கின்றாய்'' என்பது பொருள். இது வாச்சியப் பொருள் அன்று. லட்சியப் பொருள். வாச்சியம் என்பது ஒரு சொல்லுக்குள்ள நேரான பொருள். லட்சியம் என்பது குறிப்புப் பொருள். சிங்கம் என்னும் சொல்லின் வாச்சியம் வனத்திலுள்ள ஒரு விலங்கு; ஒரு மனிதனைக் குறிப்பிட்டு, ''அவன் சிங்கம்'' என்று சொன்னால், இங்கே சிங்கத்தின் சில குணங்களைப் பொருளாகக் கொள்ள வேண்டும். இது இலட்சியப் பொருள். தத், த்வம் என்ற பதங்களுக்கும், இலக்கணையால் பொருள் கொள்ள வேண்டும். தத் என்ற சொல்லுக்கு வாச்சியம். சர்வ சக்தி முதலிய குணங்கள் வாய்ந்த ஈசுவரன்; த்வம் என்ற சொல்லுக்கு வாச்சியம், அற்ப சக்தி முதலிய குணங்கள் படைத்த சீவன். இவ்விரண்டிற்கும் அபேதம் இருக்க முடியாது. ஆகையால் தத் த்வம் என்ற இரண்டு பதங்களுக்கும் லட்சியமான பிரமத்தைப் பொருளாகக் கொள்ள வேண்டும். இது மகா வாக்கியத்தின் அகண்டார்த்தம் என்று சொல்லப்படுகிறது. இந்த உண்மையைச் சாட்சாத்கரிப்பது மோட்சம்.

மோட்சத்தைப் பெறுவதற்கு வழி ஞானம். கருமம் சாதனமாகாது. கருமத்தினால் இல்லாத ஒரு பொருளைத் தோன்றச் செய்யலாம். (உற்பத்தி); ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தை அடையலாம். (பிராப்தி); ஒன்றை மற்றொன்றாக மாற்றலாம். (விகாரம்); மலினமாயுள்ளவொன்றைத் துடைத்துச் சுத்தமாக்கலாம். (சம்ஸ்காரம்); ஆத்மா எப்பொழுதும் உள்ளது, எங்கும் உள்ளது, நிர்விகாரமாய் நித்திய சுத்தமாய் விளங்குவது. ஆகையால் அது கருமத்திற்கு விஷயமாகாது. அதை அடைவது என்று சொல்வதுகூட ஔபசாரிகம். எவ்வாறு சில சமயங்களில் ஒருவன் தான் அணிந்த மாலை தன் கழுத்திலிருக்க, அதை மறந்து அங்குமிங்கும் தேடி அலைகிறானோ, அது போல நாம் ஆத்மாவைத் தேடுகிறோம். எவ்வாறு கழுத்திலுள்ள மாலையை அடைய வழி, அதைத் தெரிந்துகொள்வதோ, அவ்வாறே ஆத்மாவை

யடைய மார்க்கம் ஞானம். நிஷ்காமகருமத்தினால் மனம் சுத்தமடைகிறது. உபாசனையால் ஒருமுகப்படுகிறது. அப்பொழுது ஒருவன் ஞான மார்க்கத்திற்கு அதிகாரியாகிறான்; வேதாந்த விசாரத்தில் ஈடுபடுகிறான்.

வேதாந்த விசாரத்தை ஆரம்பிப்பதற்கு முன் நான்கு சாதனங்களை ஒருவர் பெறவேண்டும் என்று சங்கரர் கூறுகின்றார். (1) நித்தியா நித்திய வஸ்து விவேகம்: அழியாதது ஆத்மா. அழியக்கூடியவை மற்றப்பொருள் என்ற பகுத்தறிவு. (2) இகாமுத்ரார்த்த பரபோக விராகம் இந்த லோகத்திலும் பரலோகத்திலும் நாம் அடையக்கூடிய சுகத்தை நாடாதிருத்தல். (3) சமாதி சட்கசம்பத்து; சமம் முதலிய ஆறு குணங்கள். சமம் மனத்தை அடக்குதல்; தமம் இந்திரியங்களைத் தத்தம் விஷயங்களிலிருந்து திருப்புவது; உபரதி திருப்பிய இந்திரியங்களை மறுபடியும் வெளிப்போகாது காத்தல்; திதிட்சை-வெப்பம், குளிர் முதலிய இரட்டை அனுபவங்களைப் பொறுத்தல். சமாதானம்-மனத்தை ஒரு நிலையில் வைப்பது. சிரத்தை-வேதாந்த போதனையில் ஆர்வம் கொள்ளுவது (4) முமுட்சுத்துவம்: மோட்சத்தைப் பெற வேண்டும் என்ற இச்சை. இந்த நான்கு சாதனங்களையும் பெற்ற ஒருவன் வேதாந்த விசாரம் செய்யவேண்டும்.

சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்பவை ஞானமார்க்கத்தின் பகுதிகள். சிரவணம் என்பது வேதாந்த வாக்கியங்களின் அர்த்தத்தைக் குருவினிடமிருந்து கேட்பது. மனனம் என்பது கேட்ட பொருளைச்சிந்திப்பது. நிதித்தியாசனம் என்பது சிந்தித்துத் தெளிந்ததை இடைவிடாது தியானிப்பது. ஆத்ம சாட்சாத்காரம் பெற நேரிடையான சாதனம் சிரவணமா? தியானமா! என்ற விவாதமொன்று அத்வைதிகளிடையே உளது. விவரணப் பிரஸ்தானத்தைச் சேர்ந்தவர்கள் சிரவணம் என்றும், பாமதீப்பிரஸ்தானத்தைப் பின்பற்றுபவர்கள் தியானம் அல்லது பிரசங்கியானம் என்றும் கூறுகிறார்கள். ஆனால் இவ்விரு வகுப்பினரும், ''சிரவணத்தினாலோ அல்லது பிரசங்கியானத்தாலோ ஞானம் உதயமாகின்றது. இதுவே மோட்சத்திற்குச் சாதனம்' என்று ஒப்புக் கொள்ளுகின்றனர்.

இந்தப் பிறப்பிலேயே நாம் மோட்சத்தைப் பெறலாம். அவ்வாறு மோட்ச மடைந்தவர்கள் சீவன் முக்தர்கள். மோட்சம் என்பது நம்முடைய சொரூபமானபடியால், அதை வேறு தேசத்திலோ, வேறு காலத்திலோ அடையவேண்டும் என்பதில்லை. மோட்சத்தை மறைத்து நிற்பது அஞ்ஞானமான படியால், அஞ்ஞானத்தின் அழிவே மோட்சம். சீவன் முக்தர்கள் தேகம் தாங்கி சீவிப்பவர்கள் போல, நம்முடைய அனுபவத்திற்குக் காணப்படுகின்றார்கள். உண்மையில் அவர்களுக்குத் தேகமேயில்லை. அவர்கள் அவ்வாறு காணப்படுவது நம்மையும் முக்தர்களாக ஆக்குவதற்காக. அத்வைத அனுபவத்தைச் சங்கரர் ''ஞானமே உருவாயும், ஆகாயத்தைப் போல மேலானதாயும், எப்பொழுதும் ஒரே பிரகாசமாயும், பிறப்பற்றும், ஒன்றாகவும், அழிவற்றும், மலமற்றும், எங்கும் வியாபகமாயும், இரண்டற்றதாயும் எது உளதோ அதுவே நான். எப்பொழுதும் முக்தன் நான்'' என்று தம்முடைய உபதேச சகஸ்ரீரியில் விளக்கியிருப்பது, இங்கு நாம் உணர்ந்து மகிழத் தக்கதாகும். ++

---

# இறைநிலை விளக்கம்

(பூமேடை டி.எஸ். இராமையா)

இராகம்: ஷண்முகப்பிரியா — தாளம்: ஆதி

பல்லவி

ஆண்டவனைக் காண வேண்டுமையா—நாளும்
அண்டமெங்கும் நிறைந்து தாண்டவம் ஆடிடும் (ஆண்டவனை)

அநுபல்லவி

தூண்டும் அருள்ஞான சோதி செம் மயமான
தூயநல் ஒளியான துய்யன் பரம் பொருளாம் (ஆண்டவனை)

சரணம்

வருத்தி வருத்திநாளும் திருத்தும் ஜீவகாருண்யன்
வள்ளல் தேவன்இனியன் வாழ்வுஅளிக்கும் மெய்யன்
கருத்துள் இருத்தி நம்மைக் காக்கும் புனிதன் அய்யன்
கற்பனை ஊட்டும் தனியன் கருணைஇன்கனி யமுதன் (ஆண்டவனை)

அகக்கண் முன்தோன்றும் அற்புதத் தவக்கலைஞன்
ஆசைகள் அகற்றும் ஞான ஆதிநிலை ''மா'' தலைவன்
இகபரம் இரண்டிலும் இணைந்திடும் நல்துணைவன்
இசையுள் இசையும் ஈசன் எவர்கண்ணும் காணாநேசன் (ஆண்டவனை)

# ஞானாமிருதச் செல்வம்

டாக்டர் திரு. ச. கங்காதரன், M.A., M.Litt., Ph.D.,
மதுரைக் காமராஜர் பல்கலைக் கழகம்.

**முன்னுரை :**

ஞானாமிருதம் என்னும் சிறந்த சைவ சித்தாந்தச் செந்நூல், சைவ சித்தாந்தப் பெருஞ் சான்றோர் ஆகிய மெய்கண்டதேவர் அருளிய சிவஞானபோதத்திற்கும் காலத்தால், நூறாண்டுகளுக்கு முற்பட்டது. சிவஞான போதப் பேருரை வகுத்தருளிய மாதவச் சிவ ஞான யோகிகளால் பெரிதும்போற்றிப்புகழ்ந்து மேற்கோளாக எடுத்துக் காட்டப்பெறும் சிறப்பு வாய்ந்தது, ஞானாமிர்தம் என்னும் நல மிகு நூல்! இதனையருளிய வாகீசமுனிவர், கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் திரு வொற்றியூரில் சிறந்து விளங்கிய கோளகிமடத் தில் சோமசம்பு சிவாசாரியர் சித்தாந்தங்களை மக்களுக்கு அறிவுறுத்தி வந்தார். அதனால் அவர் ''சோமசித்தாந்தம் வக்காணிக்கும் வாகீசுரபண்டிதர்'' என அழைக்கப்பட்டார். மேலும் திருவொற்றியூரில் இன்றும் சிறப்பாக நடைபெற்று வரும் மகிழடிசேவை என்னும் விழா, வாகீசபண்டிதர் நாளில் நடைபெற்ற போது, அக்காலத்துச் சோழ மன்னன் இரண் டாம் இராசாதிராசன் வந்திருந்து, திருவொற் றியூர் இறைவனை வழிபட்டான்; அப்போது கோளகிமடத்து வாகீசுர பண்டிதர் ஆளுடைய நம்பிகளின் புராணத்தை விரிவுரை செய்தார். அதனை வேந்தனும் பிற செல்வர்களும்இருந்து கேட்டு இன்புற்றனர் என்று அவ்வூர்க் கல் வெட்டொன்று கூறுகிறது. இதனால் வாகீச முனிவர் இரண்டாம் இராசாதிராசன் (கி.பி. 1166-1178) காலத்தைச் சேர்ந்தவர் என்பது தெளிவு. (தெ.இ.கல்வெட்டு, தொகுதி5, எண் 1358)

**வாகீச பண்டிதர் :**

சதுரானன பண்டிதர் காலத்தில் வாகீசர், தான் பிறந்த ஊராகிய கோடலம்பாகை (கோடம்பாக்கம்)யில் இருந்து, திருவொற்றி யூர் சென்று, சோளகிசந்தானத்துச் சோமசம்பு சிவாசாரியர் வகுத்த பத்ததிகளையும் அவற் றிற்குரிய சிவாகமங்களையும் அறிவுறுத்தினார். அரசர் மதிக்கும் சிறப்புப்பெற்ற வாகீசுரபண்டி தர், பின்பு கோளகிசந்தானத்தின் கிளையாகத் திருநெல்வேலி மாவட்டத்தில் திருவாலீச்சுவ ரத்தில் இருந்த மடத்துக்குத் தலைவராய்த் தொண்டுபுரிந்தார். இங்கு வாகீசர் சிவாகமக் கருத்துக்களைத் தமிழில் இனிய அகவற்பா வடி வில் செய்தார். இதனால் வாகீசர் என்ற பெயரைவிட, ஞானாமிருதாசிரியர் என்ற சிறப் புப் பெயரே, நாட்டில் பெரிதும் வழங்கப்பெற் றது. அவர்க்குப்பின் அவரது மடத்தினர் தம்மை ஞானாமிருத ஆசிரியர் சந்தானம் என்றே கூறிக்கொண்டனர். திருவாலீச்சுரத்தில் ''கோளகிமடத்து ஞானாமிருதாசிரியர் சந்தா னத்தில் வந்த புகலிப்பெருமாள் என்பவரே, திருக்கோயிலில் சிவதன்மத்தை ஓதவேண்டும் என அங்குக் கோயில் காரியம் பார்த்து வந்த சிவப்பிராமணர் எண்மரிடை உடன்படிக்கை உண்டாயிற்று'' என்று அங்கே உள்ள ஒரு கல் வெட்டு கூறுகிறது. [தொல்பொருள்துறை அறிக்கை, ஆண்டு 1916, எண். 359]

**ஞானமிருதம் :**

ஞானாமிருதம் என்னும் இச் சைவசித்தாந் தத் தத்துவநூல், பாயிரம்(8), சம்மியஞானம் (7), சம்மிய தரிசனம் (3), பாசபந்தம்(9), தேகாந்தரம் (2), பாசனாதித்துவம் (1), பாசச் சேதவியல்(23), பதிநிச்சயம் (21), பாசமோச னம் (3) என்ற ஒன்பது பகுதிகளை உடையது. 75 அகவற்பாக்களால் ஆனது. ஞானாமிருதம் என்பது ஞானமாகிய அமுதம் எனவிரியும். ஞானமாவது சிவம், உயிர், உலகு என்ற முப் பொருளைப் பற்றிய அறிவு. அமுதம் தன்னை உண்டோரை நீடிய நல்வாழ்க்கை வாழ உதவு வதுபோல ஞானாமிருதம் என்னும் இந்நூல் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து திருவருளமு தத்தைப் பெறத் துணை செய்வதாக உள்ளது.

**காப்பு வெண்பா :**

பாயிரத்தில் முதலில் விநாயகர்வாழ்த்தும், அடுத்து கடவுள்வாழ்த்து, விநாயகர் துதி, கலை வாணிதுதி, ஆசிரியர்துதி ஆகியவையும் இடம் பெறுகின்றன. அவையடக்கம், நூற்பெயர், மறைமுறை நான்கு என்னும் செய்திகள் பாயி ரத்தின் இறுதியில் இடம் பெறுகின்றன. ''நாத தத்துவத்துள்ளும் என் உள்ளத்தும் அமர்ந்த நன் மையாகிய பொருள் மூன்று கண்களையுடைத்து, இரண்டு கவுளையுடைத்து, நான்ற (தொங்கு) வாயினை உடைத்து, நாதத்தை அணியாக உடைத்து, சிவந்த மின்னையும் தோற்கச் செய்யும் சிவந்த சடையினையுடைத்து, பக் கத்தே பூதத்தை உடைத்து, அரிய நடனத்தின்

பொலிவை யுடைத்து'' என விநாயகப்பெருமானைக் காப்பு வெண்பாவில் புகழ்ந்து கூறுகின்றார்.

**சிவபெருமான் துதி :**

கடவுள் வாழ்த்தில் சிவபெருமானின் பெருமையை-முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளாகவும், பின்னைப் புதுமைக்குப் பேர்த்துமப் பெற்றியனாகவும் உள்ள தன்மையை-வாகீச முனிவர் நன்கு விளக்குகின்றார். வெண்மையான திரையை யுடையனவாகிய சமுத்திரம் ஏழையும் மிக உயர்ந்த மகா மேருவையும், அந்த மேருவைச் சுற்றிஉள்ள எட்டு மலைகளையும், இருநூற்று இருபத்துநான்கு புவனங்களையும், அளவற்ற ஆன்ம உடல்களையும், அளவற்ற அண்டங்களையும் சிவபெருமான் படைக்கிறார். இவைகளைப் படைக்கும் போது, வித்தும் முளையுமாகிய சொரூபமான காரணப்பொருள் இன்றியே அருவமான மாயையிலிருந்து படைக்கிறார்; காக்கும் எல்லையளவு காத்து, அழிப்புக் காலத்தில் மாயையில் ஒடுக்குகிறார். படைப்புக்குக் காரணமான நான்முகக் கடவுளின் தந்தையைத் தோற்றுவித்துத்தனக்கு ஒரு குறைவில்லாமல் முன்னைப் பழம் பொருட்கு முன்னோனாகவும், பின்னும் இளமையும் அவ்வாறே பொருந்தப் பெற்றவராகவும் காணப்படுகிறார்.

வாகீச முனிவர் சத்தியும் சிவமும் இணைந்திருக்கும் காட்சியை மிக அழகாகத் தீட்டுகிறார். ''அழகிய தளிரையுடைய கொடியானது அரும்பில் தேனை உடையதாகச் செம்மையான மலையில் தவழ்ந்து படர்கிறது. இதே போன்று இசையை வென்ற சொல்லையும் ஒளியால் மாட்சிமைப்பட்ட திருநகையையும் உடைய அறவோளாகிய அம்மை, அருளாகிய அழகிய தளிரைப் பரப்பி, பக்குவான்மாக்களாகிய வண்டுகள் உண்ணும்படியான தேனை உடையவள்; சிவந்த வானத்தின் நிறத்தைக் கவர்ந்து கொண்டு கருவிகளால் அறிதற்கரிய மலையாகிய சிவபிரானைச் சார்ந்து அம்மையாகிய கொடி இருக்கிறது. இத்தகு துறவோர்க்கு எல்லையாகிய தொல்லோனது (பாக்களுக்கு அழகைக் கொடுக்கும்) சிவந்த சீர் பாதங்களை வாழ்த்தவே என்னுடைய நாவானது மாட்சிமைப்பட்டது'' என்று ,வாகீசமுனிவர் அழகுறக் கூறுகிறார்.

**விநாயகர் துதி :**

விநாயகர் துதியில் ''எண்கெழு யாண்டு பல நிரம்பினும் இளமையோடு ஞானமாகிய மதத்தால் தருக்கி, ஆன்மாக்களுடைய அளவிறந்த கன்மங்கள் பற்றற ஒழியும்படிச் சீறும் யானைமுகத்து விநாயகருடைய இரண்டு பாதங்களை விடாது வணங்கினால் விரும்பிய எக்காரியம் முடியாமல் போகும்? (எல்லாம் முறையில் முடியும் என்பதில் ஐயமில்லை)'' என்று வாகீசர் விளக்குகிறார்.

**கலைமகள் துதி :**

விநாயகர் துதியை அடுத்து வருவது, கலைமகள் துதி. இது இந்நூல் ஆசிரியர் கோளகி மடத்தைச் சார்ந்தவர் என்பதற்கு ஒரு சான்றாகக் கருதப்படுகிறது. மெய்கண்ட நூல்களின் பாயிரத்தில் கலைவாணிதுதி காணப்படவில்லை. ''முழுமதியை ஒத்த பொகுட்டையும், தேன் சொரியும் வெண்மடலையும், துணையுண்டான தாளையும் உடைய வெண்டாமரைப் பூவைப் பீடமாகக் கலைமகள் உடையவள். வண்டுக் குழாமெல்லாம் ஒலிக்க, விரும்பத் தக்க துறக்க வின்பத்தையும் மற்றும் ஆசை காரணமாக வரும் இன்பங்களையும் நீறாக்கி, பாசத்தொடர்புகளையெல்லாம் நீக்கியவள் தன்னை விரும்ப, அவ்விருப்பத்தை வேண்டினாற்போல, தன்னுடைய அருளாகிய ஒளியை விரித்துத் தன்னை அடைந்தவர்களுடைய அறியாமையால் வரும் துன்பங்களை நீக்கி அருள்புரிபவள் கலைவாணி. மேலும் பண்வல்லவர் இசையால் பாட, வேதியர் காலந்தொறும் தொழுது துதிக்க, தெய்வமகளிர் பன்முறை வணங்கியும் தமது காதல் ஆராமையால் மேலும் மேலும் துதிக்க, குற்றமற எழுந்தருளியிருக்கும் ஆதி நாயகியாகிய கலைமகளின் கழல் இணைகளைக் கருத, நிலைத்த திருவருள் இன்பத்தைப் பெறுதல் அனைவர்க்கும் எளிதாம்.''

**ஞானாசிரியர் துதி :**

சிவபிரான், விநாயகர், கலைமகள் ஆகியவர்களைத் துதித்தபின்னர், தன் குருவுக்கு வணக்கம் செலுத்துகிறார். புண்ணியமே உருவெடுத்து வருவதாகத் தன் ஆசிரியரை எண்ணுகிறார். அருள், ஞானம், வெகுளியும் துன்பமும் வந்தவிடத்துக் காக்கப்படும் பொறை, பிறர்க்குத் தீங்கில்லாமல் சொல்லப்படும் வாய்மை, உற்ற நோய் நோன்று உயிர்க்குறுகண் செய்யாத தவம், பக்குவான்மாக்களுக்கு உதவும் ஞானக் கொடை, மன்னுயிர்க்குத் தன்னைவிட இன்பம் அதிகமாகக் கிடைக்க வேண்டும் என்ற எண்ணம், ஒழுக்கம் விழுப்பம் அழுக்காறின்மை ஆகிய பத்துக் குணங்கள் கண் முதலிய அறிவுப் பொறிகளாகவும், கால் முதலியன செயற் பொறிகளாகவும் ஆசிரியருக்கு அமைகின்றன. புண்ணியத் திருமேனி கொள்ளும் ஆசிரியருக்குப் பூண் பாச வைராக்கியம், துகில் குருபத்தி, மாலை ஞானசத்தி ஆக, மேலும் உருவகத்தை விளக்குகிறார் வாகீசமுனிவர். யானையானது பாகர்களால் அடக்க முடியாமல் ஓடுகிறது. அது போல அந்தக் கரணங்களால் அடக்கமுடியாமல் ஐம்பொறிகள் சீடனைத் துன்புறுத்துகின்றன. அப்போது கருணையாகிய வீணையை விருப்பமுண்டாக இசைத்து, சாந்தமென்னும் கூரிய தோட்டியைக் கொண்டு நிறுத்தி, தன்வசமாக்கிக் கொண்ட சைவசிகாமணி என்று ஆசிரியர் குறிக்கப்படுகிறார். பரமானந்த முனிவன் என்னும் தீக்கை நாமத்தையுடைய ஞானாசிரியரின் அழகுடையனவாகிய சீர்பாதங்களைத் தோத்திரம் பண்ணி, ஆன்ம சிற்சத்தியின் கண்ணேவிளங்கும் பூரணமான மகிழ்ச்சியை மிகவும் பெற்றோம் என்று வாகீசமுனிவர்விளக்குகிறார்.

**அவையடக்கம் :**

ஆசிரியர் வணக்கத்தையடுத்து அவையடக்கத்தை அழகாக அருளுகிறார் ஆசிரியர். இப்பாடலில் 'அறத்தின் விருப்புச் சிறப்பொடு நூக்க' என்ற அடி மிகவும் முக்கியமானது. ஞானதாகத்தை அறம் என்னும் சொல்லால் வழங்குகிறார். திருவள்ளுவர் அறம் என்ற சொல்லைத் தருமம் என்ற பொருளில் மட்டுமல்லாமல், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களுக்கும் அடிப்படையானது என்னும் பொருளிலே ஆள்வதை இங்குக் கருதலாம். உலகில் நன்மையும் தீமையும் அருகருகே காணப்படுகின்றன. உதாரணமாக வேதம் ஏட்டில் எழுதப்படாமல் கேள்வி வழியாக வருவது பற்றி ''எழுதாக் கிளவி'' ''எழுதா மறை'' என்று வழங்கப்படும். எழுதாக் கிளவியுடன் பழியுண்டாகும்படியாக வாழும் ஏனோர் வசனமும் கேள்வியாகக் கருதப்படுகிறது. மேலும் போர்க்களத்தில் வெற்றி உண்டாகப் போர் செய்யும் வீரரைப்போல, ஐம்பொறிகளால் வாழும் சத்தாதி புலனாகிய பகைகளைத் தாங்கிப் பிறப்பு நீங்கும்படி அற வாழ்க்கை வாழ்வதும் வாழ்க்கை. இம்மையிலும் பிறர்க்கும் தமக்கும் பயனின்றி, மறுமையிலும் கருத்தின்றி ஆட்டின் கழுத்தில் தொங்குகின்ற அதள் போலப் பயனில்லாமல் உயிர் வாழ்வோர் வாழ்க்கையும் வாழ்க்கை. ஆகவே நன்மை, தீமையான பொருள்களிரண்டும் உலகத்தில் ஒப்ப இருக்கும். ஆதலால் பெரியோர் அருளிய நூல்களே சாத்திரமாக, தானும் புல்லிய சொற்களால் சாத்திரம் செய்வதாக ஆசிரியர் கூறுகிறார். அங்ஙனமாயினும் சான்றோர்க்கு எம் புன்சொல் தாம் அருளிச் செய்த நூலுக்குச் சிறப்பையே அளிக்கும். ஆதலால் அவரிடம் நாம் அருள் பெறுவோம். அஞ்ஞானிகள் சிற்றினமாதலாலும், 'சுற்றமாகச் சூழ்ந்து விடுதல்' அதன் இயல்பாதலாலும், அவர்களிடத்தும் தமக்கு யாம் இனமாதலால் ஒப்புதல் பெறுதல் அரிது அல்ல. இதன் விளைவாக நல்லோரும் தீயோரும் பெருமை பெறுவது தமக்கு இனத்தாரிடத்து மட்டுமே; யாம் இருதிறத்தாரிடத்தும் அருள் பெறுவோம். ஆயினும் இவ்விரு திறத்தாருடைய அருளுக்குரிய குணம், குற்றம் இரண்டும், இந்நூலிலுள்ள எழுத்து சொல் பொருள் யாப்பு அலங்காரமென்ற இவைக்கு மட்டுமேயல்லாமல், நூற்பொருள் பரமசிவன் அருளிச் செய்த ஆகமப் பொருள் ஆதலால் அதனிடத்தொரு குற்றமும் இல்லை என்று விளக்குகிறார், ஞானாமிருத ஆசிரியர்.

**ஞான அமிர்தம் கடைந்தமை :**

ஞானாமிருதத்தில் உள்ள ஞானத்துக்கும், மரபாகச் சொல்லப்படும் தேவர்கள் அமிர்தம் கடைந்த செய்திக்கும் உள்ள ஒப்புமையை, வாகீசமுனிவர் காட்டுகிறார். மேரு மலையை மத்தாகவும், ஐந்தலை அரவை நாணாகவும் கொண்டு, பலகாலம் அவுணர்களோடு தேவர்களும் கலந்து கடையும்போது, அவர்கள் இளைத்தார்கள். அப்போது விட்டுணு தமது தோள் வருந்தும்படி கடைய, கடலானது நுரை என்னும் தலையை விரித்து, திரை என்னும் பெரிய கையை எடுத்து, அன்று கலங்கியஅதிர்ச்சியால் இன்றும் கூப்பிட அமிழ்தம் கடலில் எழுந்தது என்பது மரபுச் செய்தி. தமிழுக்குப் பெருமை கொடுக்கும் சிறந்த வாயையுடைய கோமளக் கொடி போன்ற இமைய வல்லியுடன் கூடிய நுதல்விழி நாட்டத்து ஒப்பற்ற கடவுளைத் தேவர்களும் இருடிகளும் வணங்கினார்கள்; மயக்கத்தைத் தரும் பிறவியை அறுக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள். அப்போது இறைவன் பக்குவான்மாக்கள் உய்தற்பொருட்டு அருளிச் செய்த ஆகமத்தை மத்தாக நாட்டி, (இறைவனுடைய சீர்பாத தாமரைப் பூவைச் சிவஞான ஒளியுண்டாகச் சூடிக் கொண்டு), அவருடைய உபதேசம் என்னும் பெறுதற்கரிய வலிய நாணை மதியென்னும் கையால் விரையப்பூட்டி, முறுகக் கடைகிறார் ஆசிரியர். அப்போது பிறவி என்னும் துக்கம் பறந்து ஓடுகிறது. அதனுடன் புண்ணிய பாவமும் காமம் முதலிய அறுபகையும், ஐம்பொறிகளின் சேட்டையும் நீங்குகின்றன. அதுபோலத் தன்னிடத்திலுள்ள அஞ்ஞானம் என்னும் சமுத்திரத்திலிருந்து, ஞானமானது தோன்றுகிறது என ஞானாமிருத ஆசிரியர் பகர்கின்றார்.

**முடிவுரை :**

பாயிரத்தின் இறுதிப் பாட்டில் ஆகமமானது சரியை, கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு வகையாகப் பிரிவுபடும் என்று அருள்கின்றார். ஆகவே இவர் சைவாகமத்தின் மேற்கூறிய நான்கு பிரிவுகளையும் தழுவி, அவற்றின் சாரமாகத் தமிழில் நூல் செய்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. ஞானப் பகுதியும், கிரியை தொடர்பான சிவஞானபாடியத்தில் காணப்படும் ஓரகவலும் தவிர, வேறு பாட்டுக்கள் தற்போது கிடைக்கப்பெறவில்லை.

---

## கந்தவேள் புராணம்

காதை நாயகன் கந்தவேள்; கதைநிகழ் களனோ,
மீத லத்தொடு பாதலம் பூதலம்; விடயம்
போத மாந்தர்கட் குரியதாம்; கந்தவேள் புராணம்,
தீதில் சுவர்க்கத்தின் இழப்பொடு, மீட்புமாய்ச் சிறக்கும்!

—ந. ரா. முருகவேள்

---

# பதஞ்சலிமுனிவரும், யோகநெறியும்

திரு எஸ். இராமசுவாமி, B.E., M.S. (U.S.A.), சென்னை.

யோகம் என்ற சொல் பல்பொருள்பட வழக்கத்திலுள்ளது. மறைகளைச் சார்ந்த நியாயம் வைசேடிகம் சாங்கியம் யோகம் மீமாஞ்சம் வேதாந்தம் என்னும் தரிசனங்கள், பல தத்துவங்களை விளக்கி, ஆன்மாவை மனது அறியும் முறையைக் கூறுகின்றன. அவற்றில் பதஞ்சலி முனிவர் இயற்றியுள்ள யோகசாத்திரம், மிக முக்கியமான ஒன்றாகும்.

பதஞ்சலி ஒரு ரிஷி. ரிஷி என்ற வடமொழிச் சொல்லிற்குப் பொருள், உண்மையை விளக்குபவர் என்பதாகும். அவ்வாறு பல ரிஷிகள் தாங்கள் கண்ட உண்மையினைக் கூறுவதைக் கோப்பாகச் சேர்த்துச் செய்யப் பட்டவையே மறைகளாகும்.

வேதங்களில் கூறப்பட்டுள்ள அனுபவங்கள் இரு வழிப்பட்டதாகும். பலவகையான வேள்விகள் முதலியவற்றைச் செய்யும் முறை, அதற்கு ஏற்பட்ட மந்திரங்கள், அவைகளைச் செய்வதால் இம்மையிலும் மறுமையிலும் ஏற்படக்கூடிய இன்பங்கள், உயர்பதவிகள், சக்திகள் இவற்றைக் கூறுவது பிரவிருத்தி வழி. இவற்றால் இம்மை மறுமைகளில் உயர்ந்த பலன்கள் ஏற்பட்டாலும், காலத்திற்கு உட்பட்டு மறுபடி பிறவி எடுப்பதைத் தவிர்ப்பதில்லை.

ஜனகர், யாக்ஞவல்கியர், கபிலர், பதஞ்சலி முதலான முனிவர்கள், எல்லையற்ற தொல்லைகளுக்குக் காரணமான பிறப்பிறப்புக்களிலிருந்து, ஆன்மாவானது விடுதலைபெறும் வழியை ஆராய்ந்து கூறியுள்ளனர். அவர்கள் மறைகளை ஆராய்ந்து அதில் இலைமறை காய் போல் மறைவாகக் கூறப்பட்டுள்ள இரகசியமான வழிகளையும், தத்துவங்களையும், சாதாரண மக்கள் அறியும்படி செய்துள்ளனர். மறை வழி வந்த பல முனிவர்கள், இயற்றி அருளிய நியாயம், வைசேடிகம், மீமாம்சம், சாங்கியம், யோகம், வேதாந்தம் என்பனவே, நம் இந்து மதத்தில் அறுவகை நெறிகள் அல்லது ஷட்தரிசனங்கள் எனப்படுகின்றன. நியாயம் கோதமராலும், வைசேடிகம் கணாதராலும், சாங்கியம் கபிலராலும், யோகம் பதஞ்சலியாலும், மீமாஞ்சம் சைமினியாலும், வேதாந்தம் வாதராயணர் என்னும் வியாசராலும் அருளிச் செய்யப்பெற்றன. இவற்றை முனிவர்கள் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் சூத்திரங்களாக இயற்றியுள்ளனர். யோகத்தை அவ்வாறு சூத்திரமாகப் பதஞ்சலிமாமுனிவர் இயற்றியுள்ளார்.

பர்த்திருகரி என்ற இலக்கண வல்லுநர், சமுதாயத்தில் மக்கள் நல்வாழ்வுபெற ஒவ்வொருவரும் உடல் மனம் பேச்சு என்ற செயல்படும் முக்கரணங்களையும், நல்லநிலையில்வைத்திருக்க வேண்டும் என்கிறார். ஆரோக்கியமான உடல், துன்பமற்ற நற்சிந்தனைகள் ஏற்படுத்தும் மனம், இலக்கணப் பிழையற்ற பேச்சு இம் மூன்றும் அடையவேண்டும். ஆக இம் முக்கரணங்களும் கசடற்றிருக்க மூன்று நூல்கள் உள்ளன. அவையே ஆயுர்வேதம் என்ற வைத்திய சாத்திரம், இலக்கணம், யோகம் என்னும் இம் மூன்றுமாம்.

இம்மூன்று நூல்களையும் பதஞ்சலி செய்துள்ளதாகக் கூறுவதற்கு ஆதாரங்கள் உள்ளன. பொதுவாக வடமொழி இலக்கணம் (வியாகரணம்) பதஞ்சலி முனிவரால் செய்யப்பட்டிருப்பதை யாவரும் நன்கினிது அறிவர். ஆயின், யோகசூத்திரத்தைச் செய்த பதஞ்சலியும், பாணினீயம் என்னும் வடமொழி வியாகரணத்திற்குப் பாடியம் என்னும் பேருரை இயற்றிய பதஞ்சலியும் ஒருவர் அல்லவென்று பல வெளிநாட்டு ஆராய்ச்சியாளர்கள் சந்தேகப்பட்டு எழுதியுள்ளனர். பல இந்திய ஆராய்ச்சியாளர்கள் கூற்றின்படியும், வழி வழியாக வந்துள்ள நம்பிக்கையின்படியும், ஒரே பதஞ்சலியே இம்மூன்று நூல்களும் எழுதியதாகத் தெரிகிறது. யோக சூத்திரத்திற்கு விரிவுரை எழுதியுள்ள போஜராஜன், யோகசூத்திரத்திற்கு விவரணம் எழுதியுள்ள ஆதிசங்கரர் ஆகியோர் கூற்றுக்களால், பதஞ்சலி முனிவர் ஒருவரே இம்மூன்று நூல்களும் செய்தார் என்று தெரிகிறது. பதஞ்சலியைத் தியானிக்கும் செய்யுளும் அவ்வாறே ''எந்த தேவன், மனத்தின் மலத்தை யோகத்தினாலும், பேசும் வாக்கின் மலத்தை இலக்கணத்தாலும், உடலின் ஆரோக்கியமின்மையை வைத்தியத்தினாலும் போக்குகிறானோ, அந்தப் பதஞ்சலியை வணங்கிஅருள் பெறுகிறேன்'' என்று கூறுகிறது.

பதஞ்சலியைப் பற்றிப் பல வரலாறுகள் உள்ளன. அவற்றுள் மேற்கூறிய முக்கரண சுத்தியைச் செய்வதாகக் கூறும் வரலாறு ஒன்று உள்ளது. ஒரு காலத்தில் மனம் வாக்கு உடல் இவற்றின் சக்திக்குறைவால் மக்கள் அல்லலுற்று, ஈசனை வேண்ட, அவரும் செவிமடுத்து ஆயிரம் தலைகொண்ட நாகராசனாக உருவெடுத்து, இலக்கணம், வைத்தியம், யோகம் இம்மூன்று நூல்களையும் இயற்றிய தாகக் கூறப்படுகிறது. பதஞ்சலி என்றால் வேண்டுதலுக்கு (அஞ்சலி) இரங்குபவர் என்பது பொருளாகும். யோகம் பயிலும் பலர், பதஞ்சலியைத் தியானித்தே தங்கள் பயிற்சியைத் தொடங்குகின்றனர். தியானிப்பதற்கு உதவியாக இருக்கச் செய்யப்பட்ட ஒரு சுலோகம், பதஞ்சலிமுனிவர் தோள்கள் வரை மானிட உருவத்துடன், சங்கு சக்கரம் ஏந்தி, வெண்மை நிறங்கொண்டு ஆயிரம் தலை உடையவராய், நாகராசன் என்றும், அநந்தன் என்றும் பெயர் பெற்ற ஆதிசேடனின் அவதாரமாகக் கூறப்படுகின்றார்.

**யோகம் :**

பிரிந்துள்ள இரண்டு தத்துவங்கள் இரண்டறக் கலப்பது, யோகம் என்ற சொல்லின் பொருளாகும். இந்நிலை ஏற்பட இரண்டு தத்துவங்களில் ஏதாவது ஒன்றிலாவது சரியான முறையில் செயல் ஏற்படவேண்டும். அது ஏற்படும் செயல் வழியும், அவ்வாறு ஒன்றுவதால் ஏற்படும் அநுபவமும், யோகத்திற்கு உட்பட்டதாகும். இவ்வாறு பார்க்கும்போது, பலவித யோகங்கள் நடைமுறையில் தொன்றுதொட்டு வந்துள்ளன. சீவாத்துமாவும், பரமாத்மாவும் ஒன்றுபடுவதே யோகம் என்று பாகவதம் முதலான பல பக்தியோக நூல்கள் கூறுகின்றன. அடயோக முறைப்படி பார்க்குங்கால், உடலில் பரவிச் செயலாற்றும் சக்திகளான பிராணனும், அபாநனும், ஆசனம் பிராணாயாமம் மற்றும் பந்தங்களால் இதயகுகையில் ஒன்றாகக் கலக்க வழி செய்வது யோகமாகும். குண்டலினி சக்தி வழிபாட்டின்படி யோகம் என்பது மூலாதாரம் என்ற இடத்திலுள்ள சரீர ஆதார சக்தி, மெதுவாகச் சுழுமுனை நாடி வழியாக, சாந்தமானதாயும், தலையுச்சியில் உள்ளதுமான சிவன் என்ற தத்துவத்தில் இரண்டறக் கலந்து நிலைபெறுவதே.

ஆயின் ,எல்லாவித யோக வழிகளையும் அநுசரித்து, உயர்ந்த இராஜயோகத்தை விளக்கிக் கூறும் பதஞ்சலியோகம், சித்தத்தில் ஏற்படும் பலபல மாறுபடும் நிலைகளைக் கடந்து ஆன்மாவில் நிலைபெற்று நிற்கும் வழியையும் அதனால் ஆன்மா, தன் உண்மை நிலையான சித் சுயரூபத்தில் தனித்து நிற்பதாகிய கைவல்ய நிலையையும் யோகம் என்று கூறுகிறது. பதஞ்சலியின் யோகம் மூன்று தனித் தத்துவங்கள் உள்ளனவாகக் கொண்டுள்ளது. அவையாவன: புருஷன் எனப்படும் சீவாத்மா, புத்தி முதலாகிய பஞ்ச பூதங்கள் உள்ளிட்ட பிரபஞ்சம், ஈசுவரன் என்ற தனித்தத்துவம்.

புருஷன், எல்லா உயிரினங்களிலும் உள்ளிருந்து அறிபவன், அறியும் தத்துவம். இது மாறுபாடு அற்றது, எப்பொழுதும் மனத்தில் தோன்றும் பலநிலைகளைக் காண்கிறது. ஆயின் தான் மாறாதது, சுத்தமானது; ஆசை நிராசை இன்பம் துன்பம் பிறப்பு இறப்பு பாவபுண்ணியம் இவற்றிற்கு அப்பாற்பட்டது. ஆயினும் எப்பொழுதும் மனத்தின்கண் மாறி மாறிவரும் நிலைகள், உணர்வுகள் இவற்றைக் காண்பதால் தானும் மாறுபடுவதுபோல், தனித்தன்மையற்று இருப்பதுபோல் தோன்றுகிறது.

பிரகிருதி என்பது பலவாறாக உருவமும் பெயரும் எடுத்து அனுபவிக்கப்படுவது. இது பெருத்தும் சிறுத்தும் பலநிலைகளில் காணப்படுவது. ஐந்து பூதங்களால் ஆனதும், புத்தி முதலாக எல்லாவிதப் பொருள்களாகவும் காணப்படுகிறது. அப்படிப் பார்க்கும்பொழுது மனதும் பிரகிருதியைச் சேர்ந்தது. மனத்திற்கு ஏற்படும் பல அநுபவங்கள், இன்பதுன்பங்கள், எண்ணங்கள்-நான் இருக்கிறேன் என்ற எண்ணம் உள்பட-இவையெல்லாம் உள்ளிருக்கும் ஆன்மாவினால் காணப்படும் பிரகிருதியேயாம். ஆன்மாவின்றிப் பிரகிருதிக்கு ஒருவிதப் பயனும் கிடையாது. பலவிதமாக வெளிச் செல்வதும், விஷயங்களிலிருந்து விடுபட்டு உள்நோக்குவதும் மனமே.

சாங்கிய தத்துவம், பிரகிருதி புருஷன் என்னும் இரண்டைத் தவிர வேறு தத்துவங்கள் இருப்பதாகக் கூறுவதில்லை. சாங்கியம் ஈசுவரன் என்ற தனித்தத்துவம் இருப்பதாகக் கூறுவதில்லை. யோகம் ஈசுவரன் என்ற தனித் தத்துவம் இருப்பதாகக் கொள்கிறது. இறைவன் பிரணவமாகிய ஓம் என்ற மந்திரத்தை ஓதுவதால் உணரப்படுகிறான். புருஷன்போல் ஈசுவரன் அறிவுமயமானவன். சாமான்ய சீவன்கள், மனத்தின் கிலேசங்கள், அந்த ஆசாபாசத்தில் ஏற்படும் செயல்கள், அச்செயல்களால் ஏற்படும் புண்ணிய பாவ பலன்கள், அதன் நினைவால் ஏற்படும் கிலேசங்கள், என்ற இந்த மனத்தின் சுழலால் பீடிக்கப்படாதவன் ஈசுவரவரன். அவைகட்கு உட்பட்டதில்லை. உட்பட்டதுபோல் தோற்றமளிப்பதும் இல்லை. அவனைத் தியானிப்பதால், யோகப்பயிற்சி செய்பவனின் பல இடையூறுகள் தவிர்க்கப்படுவதுடன் சமாதி நிலையும் ஏற்படுகிறது.

**யோக சூத்திரம் :**

சராசரி 6 சொற்கள் கொண்டவை ஒவ்வொரு சூத்திரம். யோக சூத்திரம் 195 சொற்றொடர்கள் கொண்டவை. இவையும் 4 அத்தியாயங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளன.

முதலாவது சமாதி பாதம் என்பதாகும். இதில் சித்தத்திலுள்ள மலங்கள் போக்கப்படுவதால், சித்தமானது உயர்ந்து, படிகமணிபோல் சுத்தமடையவும், பின் அது ஒருமுகமாகவும் வழி கூறப்படுகிறது. ஆனால் இந்த பாதம், முன்வினைப் பயனாலோ, இறைவனின் அருளாலோ, பிறவியிலேயே சஞ்சலத்திற்கு இடங்கொடாது உயர்நிலை யோகப் பயிற்சியாளர்

கட்காகக் கூறப்பட்டுள்ளது. இந்தப் பகுதியில் சமாதியின் இலக்கணம், அதன் பல்வேறு பாகுபாடுகள், அவற்றையடையும் வழி, சித்தம் ஒருமுகப்படுதல், எல்லாவற்றையும்விட்டு, ஆன்மாவில் நிலைத்து நிற்றல் ஆகிய இருவித சமாதி நிலைகள் விவரிக்கப்படுகின்றன.

அடுத்தது சாதனபாதம். இதன்கண் முன்வினையாலும், பழக்க வழக்கங்களாலும், பல வெளி விஷயங்களை நாடிச் சென்றுகொண்டிருக்கும் நம்போன்ற நிலையற்ற சித்தமுடையவர்கட்காக, படிப்படியாக சமாதிநிலை ஏற்படுவதற்குரிய வழிவகைகள் ஆகிய சாதனங்களைக் கூறப்படுகின்றன. இதிலும் கீழ்நிலை யோகப்பயிற்சியாளர்கட்கு, கிரியாயோகம் என்ற வழியும், நடுநிலையிலுள்ளவர்கட்கு ஆசனம் பிராணாயாமம் உள்ளிட்ட எண்வகை நிலை என்ற அஷ்டாங்க யோகநெறியும் விவரிக்கப்படுகின்றன. அதிலுள்ள முதல் ஐந்து படிகளான இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் ஆகியவற்றின் குணவிசேடமும், அவற்றை முறையே பயில்வதால் ஏற்படும் பலன்களும் விவரிக்கப்படுகின்றன.

மூன்றாவதான விபூதி பாதம் என்பது பலவித யோக சித்திகளைக் கூறுகின்றது. எண்வகைநிலை என்னும் அட்டாங்க யோகத்தில் முதல் 5 படிகளால், வெளிவிஷயங்களில் நாட்டம் குறைந்து, மற்றும் ஆசன பிராணாயாமங்களால், உடலும், மனமும் வலுவடைகின்றன. குறைபாடுகள் அற்றமனம், உயர்ந்த விஷயத்தை இடைவிடாது நினைக்கவும், ஆராயவுமான தகுதியை அடைகிறது. இந்நிலையில் செய்யும் யோகம் இராஜயோகம், அந்தரங்க யோகம் எனப்படும். இதனால் எந்த உயர்ந்த விஷயத்தை மனம் ஊன்றிச் சிந்திக்கிறதோ, அதிலேயே நாளடைவில் அஃது அழுந்திநின்று ஒன்றுபடுகிறது. இதுவே அறிவுநிலைச் சமாதியாகும். இதனால் ஏற்படும் அறிவு, சந்தேகமற்றது, உண்மையானது. இது சாமானியமாக ஏற்படும் நிச்சயமற்ற அறிவைக் காட்டிலும் வேறானது. அறிவின் கலக்க மயக்கங்களைப் போக்கவல்லது. இந்த யோக சாதனையால் நாம் நினைக்கும் பொருளின் இயல்புகளுக்கு ஏற்ப நமக்குப் பல சித்திகள் ஏற்படும்.

நான்காவது பாதம் கைவல்யம் எனப்படும். கைவல்யம் என்பது தனித்து நிற்கும் ஆன்மாவின் தனிநிலை. முன்கூறியபடி ஆன்மா மாறுபடாதது, அறிவது, ஒன்றையே குணமாகக் கொண்டது! ஆசாபாசம், பிறப்பு, இறப்பு, மாறுபாடுகள், இன்பதுன்பங்கள், நான் என்ற எண்ணம், இவையாவும் பிரகிருதியைச் சார்ந்ததனால் ஏற்படுவன என்ற அறிவால் நாளடைவில் தான் அடையவேண்டிய உயர்ந்த நிலை ஆன்மாவே என்று உணர்ந்து, சித்தமானது மற்றைய எண்ணம் ஒன்றிலும் ஈடுபடாமல் நிற்கும் நிரோத நிலையையும், அதனால் ஆன்மா மாசுமறுவற்ற தன் ஞானநிலையில் நிற்பதையும் கூறுவது, கைவல்ய பாதம். இந்நிலையின் வேறாகவும் மேலாகவும் அடையப்பட வேண்டிய உயர்நிலை வேறெதுவுமில்லை. உயர்வு அடையவேண்டும் என்ற ஆசையும் இல்லை.

யோக நெறிக் கலைக்கு அடிப்படை நூல் பதஞ்சலி முனிவர் இயற்றிய யோகசூத்திரம். இதற்கு வியாசமுனிவர், இராஜபோஜர், சங்கராச்சாரியர், வாசஸ்பதிமிச்ரர், சாயனாச் சாரியார் முதலானோர் விளக்க உரைகள் இயற்றியுள்ளனர். ஈசனின் அவதாரமான பதஞ்சலியின் சிலை, சிதம்பரம் கோவிலில் உள்ளது.

மனத்தை மனத்தால் அடக்கி ஆன்மாவை அறிய வழிகாண்பிக்கும் ஒரு சிறந்த நடைமுறை நூலே, பதஞ்சலியின் யோகசாத்திரம் ஆகும் எனச் சுருங்கக் கூறலாம்.

---

## வானத்தவர்க்கு அரும்பேறு

உண்மையான பக்தர்கள், இறைவனுக்குரிய திருத்தொண்டு (பகவத் கைங்கர்யம்) தவிர, வேறு எதனையும் தம் நெஞ்சால் நினைக்க மாட்டார்கள். திருமாலுக்கு அடிமைத்தொழில் செய்வது ஒன்றுதான், தமக்குரிய இயல்பும் கடமையுமாகும் என்று தெளிந்து துணிந்திருப்பர் அவர்கள். பகவத் கைங்கர்யம் செய்யப் பெற்றால், அதுவே பெறலரிய பெரும் பேறு (புருஷார்த்தம்); அதற்கு மேலானது ஒரு பேறும் இல்லை என்று, அளவற்ற நம்பிக்கை கொண்டு, கடைப்பிடித்தொழுகும் பாகவதர்கள், வைகுண்டத்திலுள்ள நித்திய முக்தர்களுக்குக் கிடைத்தற்கரிய பெருவிருந்தினராகப் பிறங்குவர். அவர்களுக்குத் திருநாடு எளிதிற் கிடைத்தல் திண்ணம்.

மற்றொன்றை எண்ணாதே மாதவனுக்கு ஆட்செயலே
உற்றது இதுவென் றுளம்தெளிந்து—பெற்ற
பெரும்பேற்றின் மேலுளவோ? பேறென் றிருப்பர்
அரும்பேறு வானத் தவர்க்கு

—ஞானசாரம்.

[மற்று ஒன்று—இறைவனின் திருத்தொண்டு அல்லாத வேறு ஒரு செயல். மாதவன்—திருமால். ஆட்செய்தல்—கைங்கர்யம் புரிதலாகிய அடிமைத்தொழில் புரிதல். வானத்தவர்—வைகுண்டவாசிகளான நித்தியமுக்தர்கள். ''செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான் நல்விருந்து வானத்தவர்க்கு'' என்றாற் போல்வது இஃது.]

—ஆசிரியர்.

---

# வைணவத்தில் தேவி வழிபாடு

(டாக்டர் திரு ந. சுப்பு ரெட்டியார், M.A., Ph.D.)

வைணவத்தில் தேவி என்பது இலக்குமியைக் குறிக்கும். சைவ சமயத்தினர் இறைவனை 'அம்மையப்பன்' என்று கருதுவது போலவே, வைணவ சமயத்தினர் இறைவனை 'இலக்குமிநாராயணன்' எனக் கருதுகின்றனர். சைவத்தில் சக்தியும் சிவனும் ஒன்றுபட்டிருப்பதுபோலவே, வைணவத்தில் இலக்குமியும் நாராயணனும் ஒன்றுபட்டிருக்கின்றனர். இருக்டவுளரின் பெயர்களிலும் தேவிக்கு முதல் இடம் இருப்பது கருதத்தக்கது. ''அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பன்'' என்பது நம்மாழ்வாரின் திருவாக்கு. அலர்மேல்மங்கை-திருமகள், இலக்குமி. திருமால் என்ற பெயரில் 'திரு' முற்பகுதியாக இருப்பது கருதத்தக்கது. திரு (செல்வம்) வாழ்க்கைக்கு இன்றியமையாததாக இருப்பதால் எல்லோரும் 'திரு' என்ற அடைமொழியைத் தம் பெயருடன் சேர்த்துக் கொள்ள விரும்புகின்றனர். இதனாலன்றோ திருவேங்கடத்தெம் பெருமான் 'ஸ்ரீநிவாசன்' என்றும், திருவண்பரிசாரத்து எம்பெருமான் 'திருவாழ்மார்பன்' என்றும் வழங்கப்பெறுகின்றனர். இலக்குமியைத் திரு, பெரியபிராட்டியார், அரிப்பிரியை என்றெல்லாம் வழங்குவர். வைணவ தத்துவத்தில் இறைவனும் இறைவியும் பிரிக்கப் பெறாது ஒன்றாகக் கருதப்பெற்றாலும், செயல்முறையில் அவர்களைத் தனித்தனியாகக் கருதும் மரபும் உண்டு. இறைவன் 'செய்வினை என்னும் சட்டத்தின் அடிப்படையில் இவ்வுலகை ஆட்சிபுரிகின்றான்; அவனுடைய தெய்விக வெகுளியின் முன்னர் தீவினை புரிவோர் தப்ப முடியாது. ஆயின், வினையின் துன்பம், நற்கதி விளைக்கும் தேவியின் கருணையினால் அடக்கி ஆளப்பெறுகின்றது. தீவினைகள் தொலைக்கப் பெற்று, தீவினை புரிந்தோர் காக்கப்பெறுகின்றனர். சட்டத்தின் அடிப்படையில் ஆட்சிபுரியும் இறைவனும், அன்பின் (கருணையின்) அடிப்படையில் ஆட்சிபுரியும் இறைவியும், இணைந்து செயற்படுவதால் சட்டத்தின் அன்பும், அன்பின் சட்டமும் உயிர்நிலையாக ஒன்றோடொன்று பிணைந்து தெய்விக இயல்பாகக் காட்சியளிக்கின்றன. நீதியின் தெய்விகச் சட்டத்தின் மாட்சிமை அனைத்தையும் வெல்லும் இயல்புள்ள கருணையின் வலிமையுடன் என்றுமுளதாகப் பிணைந்து நிற்கின்றன என்று சொல்லி வைக்கலாம். அறநூல்கள் வினையின் ஆட்சியை வலியுறுத்துகின்றன; சமயம் கருணையின் வரம்பற்ற நிலையை உணர்த்துகின்றது. அறத்தின் அடிப்படையில் அமைந்த சமயம் இரண்டன் உரிமைகளையும் சீர்தூக்கிப் பொருத்தமுறச் செய்கின்றது. இதனையே வேதாந்த தேசிகரும் ''ஒண்டொடியாள் திருமகளும் தானும் ஆகி'' என இறைவன்-இறைவி நிலையைக் குறிப்பிட்டார். திருமகள்-பெரியபிராட்டியார்; தான்-இறைவன், நாராயணன்.

தெய்வீகச் சட்டத்தில் அன்பு ஊடுருவிப் பாய்ந்து செல்வதாகவும், அச்சட்டம் இரக்க உணர்வால் ஆட்கொள்ளப் பெறுவதாகவும் கருதுவது வைணவ சமயம். இங்கு இலக்குமி என்றும் மலர்ந்து வரும் வாழ்வாகிய தாமரையில் வாழ்வதாக ஐதிகம்; ஆகவே அவள் தெய்விகத்தின் இதயமாகவே அமைகின்றாள். அன்பின் வடிவமாக அமைந்து எல்லாம் வல்ல இறைவனுடனும் யாதொரு ஆற்றலுமில்லாத உயிர்களுடனும் இணக்கம் உண்டு பண்ணுகின்றாள். வைணவ சமயத்தினர் இதனைப் 'புருஷகாரம்' செய்வதாகக் குறிப்பிடுவர். பெரிய பிராட்டியாரும் 'புருஷகார பூதையாகக்' குறிப்பிடப் பெறுகின்றார். இறைவனும் இறைவியுமான இருவரோடும் மக்கட்குச் சம்பந்தம் உண்டாயிருக்கவும் இறைவனை அடையும்போது இவள் புருஷகாரமாக வேண்டுகிறது என்? என்ற வினா எழுகின்றது. அதற்கு ஸ்ரீவசனபூஷணம் விளக்கமான விடைதருகின்றது. ''தாயாம் தன்மையால் வந்த வாத்சல்யத்தின் மிகுதியாலும், அவனைப்போல் (இறைவனைப் போல்) வன்மையும் மென்மையும் கலந்திருக்கையன்றிக்கே, கேவலம் மென்மைத் தன்மையேயாய்ப் பிறர் கண்ணழிவு காண மாட்டாத தன்மையளாகையாலும், தீய மனமுடையவர்களையும் மருவித் தொழும் மனமுடையவர்கள் ஆக்குகைக்குத் தக்க செயல்புரியுமவளாகையாலும், குற்றமுடையவர்களும் கூசாமல் வந்து காலிலே விழலாம்படி இருப்பாளாய், ஆண்மையால் வந்த வன்மையோடே தந்தையாம் தன்மையால் நலம்செயும் தன்மையுடையவனாய், குற்றங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டுக் கொடிய தண்டங்களைச் செய்கையாலே, குற்றமுடையவர்கள் முன்செல்லக் குடல் சரிக்கும்படி இருக்கும் சர்வேச்வரனை, தக்க வழிகளாலே குற்றங்கள் அனைத்தையும் மறப்பித்துச் சேர்ப்பிக்குமவளாகையாலே, பாவமே செய்து பாவிகளான இம் மக்கள் சர்வேச்வரனைப் பற்றுமளவில் இவள் புருஷகாரமாக வேண்டும் என்பது. சர்வேச்வரனுடைய அருளைக் காட்டிலும் இவளுடைய அருள் சிறப்புடையது. காரணம், சர்வேச்வரன் வேறு ஒருவரால் தடைசெய்யப் பெறாத சுவ

தந்தரத்தை யுடையவன்; அருள் செய்தல், தண்டனை செய்தல் என்னும் இரண்டிற்கும் உரியவன்; மக்களுடைய நல்வினை தீவினை களை நிறுத்து அறுத்து அவற்றின் பயன்களை நுகர்விப்பவன்; அவனுடைய அருள் சுவாதந் திரியத்தாலே அமுக்குண்டு கிடந்து ஒவ்வொரு நிலைகளிலே தலையெடுக்கக் கூடியதாக இருக் கும். இவளோ, அருள் ஒன்றனையே தன்மை யாக உடையவளாகையாலே, இவளுடைய அருள் வேறு ஒன்றால் மறைக்கப் பெறுவதன்று. அது எஞ்ஞான்றும் ஒரு படிப்பட்டிருக்கும். ஆகையால் இவளுடைய அருள் கரை அழிந் திருக்கும். இதனால்தான் இவளைப் பற்று பவர்கட்கு வேறு ஒரு புருஷகாரம் தேட வேண்டாதொழிகின்றது.

மேற்கூறியவற்றால் ஈசுவரன் உயிர்களைக் காக்குங்கால் அவனுக்குக் கருணையே வடி வாகவுடைய பிராட்டியாரின் கூட்டுறவு இன்றி யமையாததாகும் என்பது பெறப்படுகின்றது. பிராட்டியார் உடனிருந்தமையால் காகாசுரன் பிழைத்தான். இவள் பிரிந்திருந்தமையால் இராவணன் இராமபிரானின் கணைக்கு இலக் காகி உயிரிழந்தான். ''இவள் சந்நிதியாலே காகம் தலை பெற்றது; அது இல்லாமையாலே இராவணன் முடிந்தான்'' என்ற முமுட்சுப்படி வாக்கியத்தையும் நோக்குக. அன்றியும்.

'ஆவியைச் சனகன் பெற்ற
அன்னத்தை அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத்
திகைத்தனை போலும் செய்கை''

என்ற வாலியின் ஏளனப் பேச்சிலும் இந்த உண்மை நிழலிடுவது கண்டு மகிழத்தக்கது. ஈசுவரன் உயிர்களைக் காக்குங்கால் அவர்களின் அளவற்ற குற்றங்களைக் கண்டோ, தன் சுவா தந்திரியத்தாலோ அவர்களைப் புறக்கணிக்க வும் கூடுமாதலின், அவ்வமயம் ஈசுவரனுக்கு உயிர்களிடம் கருணை பிறக்குமாறு வேண்டி யதை வேண்டியாங்குச் சொல்லிப் புருஷகாரம் செய்யும் பிராட்டியார் அருகில் இருந்தே ஆக வேண்டும். அப்போதுதான் இறைவன் தடை யின்றிக் காத்தல் தொழிலை மேற்கொள்ள இயலும். பிராட்டியை விரும்பாமல் பெரு மாளைப் பற்றின சூர்ப்பனகை கேட்டினை அடைந்தாள். பெருமாளை ஒழியப் பிராட்டி டியைப் பற்றின இராவணனும் கேட்டினை அடைந்தான். இருவரையும் பற்றின வீடணன் உய்ந்தான்.

பெரிய பிராட்டியார் புருஷகாரம் செய் யும்போது இரண்டு தன்மைகள் தலைக்காட் டும். இதனைப் பிள்ளை உலக ஆசிரியர்.

சேதனனை அருளாலே திருத்தும்;
ஈசுவரனை அழகாலே திருத்தும்

என்று அருளிச் செய்வர். மக்களை அருளாலே திருத்துகையாவது ''ஐயோ, இவனுடைய தீய அறிவு நீங்கி ஈசுவரனிடத்தில் ருசி உண்டா கைக்கு அடியான நல்லறிவு உண்டாக வேண் டும்'' என்று அவர்கள் திறத்தில் தான் பண்ணு கின்ற 'பங்கயத்தாள் திருவருள்' (திருவாய். 9:2:1) என்கின்ற மேலான அருளாலே அவர் களுடைய தீய அறிவு குலைந்து இறைவனிடத் தில் ருசியுடையராம்படி செய்தல். ஈசுவரனை அழகாலே திருத்துகையாவது,''ஓம்காண், போ, உனக்குப் பணியன்றோ இது?'' என்று தன் உபதேசத்தை உதறினவாறே கண்களைப் புரட்டுதல், கச்சை நெகிழ்க்குதல் செய்து தன் அழகாலே அவனைப் பிச்சேற்றித் தான் சொன்னபடி செய்தல்லது நிற்கமாட்டாதபடி செய்து அங்கிகாரத்தைச் செய்வதிலே நோக் குள்ளவனாகச் செய்தல். இங்ஙனம் பிராட்டி யார் பெருமாளைப் பிச்சேற்றுவதை''வண்டார் பூமா மலர்மங்கை மணநோக்கமுண்டானே' (பெரிய திருமொழி 8-10-1) என்றருளிச் செய் வர் திருமங்கையாழ்வார். பிராட்டியின் கடைக்கண் நோக்கத்தை எம்பெருமான் பரம போக்கியமாகக் கொண்டு அதையே தனக்கு ஜீவநாதாரமாகவும் கொள்வதனால் ''மலர் மங்கை மணநோக்கம் உண்டானே'' என்றார் பிராட்டியின் கடைக்கண் நோக்கை. பிராட்டி யின் புருவ நெறிப்புப் படியே செயற்படுபவன் என்பது குறிப்பு. பேயாழ்வாரும் பெருமாள் நிலையை ''மலராள் தனத்துளான்'' (மூன். திருவந். 3) என்று குறிப்பிடுவர். திருப்பாற் கடலைப் போலவே பெரிய பிராட்டியாரின் திருமுலைத் தடத்தையும் தான் தங்கும் ஓரிட மாகக் கொள்பவனாயிற்று என்கின்றார் ஆழ் வார்.

இலக்குமியின் பலதிருநாமங்களிலும் ஸ்ரீஎன்ற திருநாமத்திற்குச் சிறப்பு உண்டு. இந்த ஸ்ரீ என்ற சொல்லின் வினையடி (ச்ரீஞ்') என்பதாகும். இதன் பொருள் சேவித்தல் என் பது. இது இருவகைப்பட்ட பொருள்களை யுடையதாக இருக்கும். ஒன்று சேவிக்கப்படு கிறாள், மற்றொன்று சேவிக்கிறாள் என்பது. முதற்பொருளில் 'ச்ரியதே இதி ஸ்ரீ' எனவரும். இதனைக் கர்மணி வியுத் பத்தி என்பர். அதா வது செயப்பாட்டு வினை என்பதாகும். இப் பொருளில் கிருபை என்ற குணம் வெளிப்படு கின்றது. கிருபையாவது, பிறர் துக்கம் கண்டு பொறுக்க மாட்டாமை. இரண்டாம் பொரு ளில் 'ச்ரயதே இதி ஸ்ரீ' எனவரும். இதனைக் கர்த்தரி வியுத்பத்தி என்பர். அதாவது, செய் வினை என்பதாம். இப்பொருளில் பாரதந்திரி யம், அநந் யார்ஹத்துவம் என்ற இரண்டு தன்மைகளும் வெளிப்படுகின்றன. பாரதந்திரி யமாவது, பரனுக்கு வசப்பட்டிருத்தல்; தனக்கு உரியளாகாது அவனுக்கு உரியவளாக இருத்தல். அநந்யார்ஹத்வமாவது, அவனைத் தவிர ஏனை யோர்க்கு உரிமைப்பட்டிராத தன்மை; அதா வது பிறருக்கு உரியவளாகாது அவனுக்கே உரிய வளாக இருத்தல். 'ஸ்ரீமத்' என்ற பதத்திலே யுள்ள 'மத்' என்ற இடைச் சொல்லாலும் இந்த இரண்டு தன்மைகளும் வெளிப்படுகின் றன. 'ஸ்ரீமத்' என்பதற்கு 'ஸ்ரீயோடு என்றும் சேர்ந்திருக்கிற' என்பது பொருள். 'ச்ரு— ஹிம்சாயாம்' என்ற வினையடியில் தோன்றின சொல் ஸ்ரீ என்பது. இதன் வித்யுத்பத்தி 'ஸ்ருணாதி' என்பது; இதன்பொருள் நாசப் படுத்துதல் என்பதாகும். அதாவது, ஈசுவர

னுடைய சுவாதந்திரியத்தையும் உயிர்களின் தி மனத்தையும் போக்குகின்றாள் என்றபடி. 'ஸ்ரு விஸ்தாரே' என்ற வினையடியில் தோன்றின ஸ்ரீ என்ற சொல்லாகிய ஸ்ரீயின் வித்யுத்பத்தி 'ஸ்ரூணாதி' என்பது. விரிவுபடுத்தல் என்பது இதன் பொருளாகும். அதாவது ஈசுவரனு டைய கிருபை முதலான குணங்களையும், உயிர் களின் ருசி முதலானவற்றையும் விரிவுபடுத்து கிறாள் என்றபடி. 'ஸ்ரு-ஸ்ரவணே' என் வினையடியில் தோன்றின ஸ்ரீ என்ற சொல்லின் ஸ்ருவித் யுத்பத்தி 'ஸ்ரூணோதி' என்பது. இதன் பொருள் கேட்கிறாள் என்பது. இன்னொரு வியுத்பத்தி 'ஸ்ராவயதி' என்பது; இதன் பொருள் கேட்பிக்கிறாள் என்பதாகும். இங் ஙனம் ஆறு பொருள்களைத் தரும் ஸ்ரீ என்ப தன் சிறப்பு புலனாகும்.

ஆயினும், உயிர்களின் நலத்தில் பெரும் பங்குபெறும் இலக்குமியின் நிலை வாதத்திற்கு இடமாக உள்ளது. இவ்வாதம் அவள் இயல்பு பற்றியதாகும். அறத்திற்கும் கிருபைக்கும் இடம் தந்து அவள் எங்கும் நிறைந்திருப்பவள் (விபு) என்றும், உயிர்த் தத்துவ விளக்கத்தின் படி அவள் பிரியா நிலையில் இருப்பவள் என் றும், செயற்படும் நிலையில் பிரிந்த நிலையில் இருப்பவள் என்றும் கருதுவர். மலரும் மண மும்போல் ஈசுவரனும் ஈசுவரியும் ஒன்றில் இரண்டாகவும், இரண்டில் ஒன்றாகவும் இருப் பர் என்றும், இங்ஙனம் இணைந்தநிலை முமுட் சுக்களுக்கு (மோட்சத்தில் விருப்பமுள்ள வர்கள்) உயிரானநிலை என்றும் நம்புவார்கள். தென் கலையாரோ இருமையின் கடந்த நிலையை மறுப்பர். இவர்கள் இலக்குமியைச் சீவர் நிலையில் வைத்துப் பேசுவர். ஆயினும் இருசாராரும் இவளுடைய கிருபை வீடு பேற் றிற்கு இன்றியமையாதது எனக் கொள்வதற் குத் தடை இல்லை. இணக்கத்தை உண்டுபண் ணும் இவளுடைய தெய்விக நிலையின் காரண மாகப் பாவிக்கும் பரமனுக்கும் இடையில் தலையிட்டுப் பாவியை முக்தனாக்குகிறாள்; பரமனைக் காப்பவனாக்குகிறாள். இதனால் மக்களின் வழிபாட்டிற்கு உரியவளாகின்றாள். வடமொழியில் இவளைப் பற்றிய பல தோத் திர நூல்களும் தமிழில் ஒருசில தோத்திர நூல் களும் எழுந்துள்ளன. வைணவர்கள் இவளை வழிபடு தெய்வமாகக் கொண்டுள்ளனர். வைண வர்களேயன்றிப் பிற இந்துக்களும் இவள் படத்தை வீட்டில் வைத்து வணங்குகின்றனர். நடுவில் கணபதியும் அவர் இருபுறமும் கலை களும் திருமகளும் கொண்ட படங்கள் ஒவ் வொரு வீட்டிலும் இருப்பதைக் காணலாம். இலக்குமியை எட்டு நிலையில் பிரித்து அஷ்ட லட்சுமியாக வழிபடும் வழக்கமும் எழுந்துள் ளது. சென்னை பெஸண்ட் நகரில் எழுந்துள்ள அஷ்டலட்சுமிகோயில் இதற்கு ஒரு சான்றாகும். நம்மாழ்வாரும், ''வேரி மாறாத பூமேல் இருப் பாள் வினைதீர்க்குமே'' என்று திருமகளைச் சிறப்பித்தமை எண்ணத்தக்கது. தேவி வழி பாட்டிற்கு இது மிகவும் அடிப்படையான கருத் தாகும்.

---

## உலகெங்கும் சிவலிங்கம் !

நமது இந்திய நாட்டிலும், குறிப்பாக இந்து மதத்திலும் சிறப்பாகப் போற்றி வழிபடப்பெறும் தெய்வத் திருவுருவங்கள் அல்லது அடையாளங்களில் சிவலிங்கத் திருவுருவம் மிகவும் சிறப்புடைய தொன்றாகும். இமயம் முதல் குமரி வரையிலுள்ள எண்ணிறந்த எத்தனையோ பல தலங்களிலும் கோயில்களிலும், சிவலிங்கத் திருவுருவங்கள் சிறப்புற நிறுவப்பட்டுத், தொன்னெடுங்காலம் முதல் இன்றளவும், இந்தியத் துணைக்கண்டம் முழுவதிலுமே, பல கோடிக்கணக்கான மக்களால் பரவிப் போற்றி வணங்கப்பட்டு வருகின்றன. சிலலிங்கத் திருவுருவின் பழமையும் பெருமையும் எல்லையற்றன. மொகஞ்சதாரோ, ஆரப்பா முதலிய இடங்களில் நிகழ்ந்த அகழ்வு ஆராய்ச்சிகளில், மிகப் பல சிவ லிங்கத் திருவுருவங்கள் கண்டெடுக்கப்பெற்றுள்ளன. அதனால் சற்றேறத்தாழப் பத்தாயிரம் ஆண்டு களுக்கு முற்பட்ட சிந்துவெளி நாகரிக காலத்திற்கு முன்னரே, சிவலிங்க வழிபாடு இந்திய நாட்டில் நிலவி இருந்தமை புலனாகின்றது. சிந்துவெளிப் பகுதியில் கிடைத்த சிவலிங்கத் திருவுருவங்கள் மிகப் பலவற்றைக் கண்ட 'மேலை நாட்டு ஆராய்ச்சியாளர்கள் வியப்படைந்து, உலகிலேயே மிகவும் தொன்மைவாய்ந்த சமயம், சைவ சமயமே ஆதல் வேண்டும். என்னும் உண்மையை உணர்ந்து குறிப் பிட்டுள்ளனர். சிவலிங்கத் திருவுருவங்களும், சிவலிங்க வழிபாடும், இந்திய நாட்டில் மட்டுமேயன்றி, எகிப்து சிரியா அசீரியா பாரசீகம் சிறியஆசியா துருக்கி கிரீசு இத்தாலி பிரான்சு ஜெர்மனி ஆப்பிரிக்கா ஸ்லாவோனியா அமெரிக்கா திபெத்து சீனா ஜப்பான் முதலிய உலகின் பல பகுதிகளிலும் ஒருகாலத்தில் பெரிதும் பரவியிருந்தன. இதனை ஆடர் எம். வெஸ்ட்ராப், இ.பி.டெய்லர், ஆலன் கிராண்ட் முதலிய மேலைநாட்டு ஆராய்ச்சி அறிஞர்கள் தத்தம் நூல்களில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளனர்.

—ஆசிரியர்

" The practice of Linga-worship was so general as to have spread itself over a large part of the habitable globe, for it flourished for many ages in Egypt, Syria, Assyria, Persia, Turkey, Greece and Italy. It was prevalent also in France, Germany and slavonia. It appears to have been reverentially adored even in Tibet, China, Japan and in many parts of America, before its discovery by the Spaniards, being regarded as the most sacred object of worship and consectrated by religion. The culture was associated with the very idea and sentiment which was regarded as ennobling to men.''

—Hodder M. Westrop

---

# சைவ சித்தாந்தம்

''சைவசித்தாந்தக் கலைச் செல்வர்''

திரு. க. வச்சிரவேலு முதலியார், பி.ஏ.எல்.டி., மதுரை

**அடிப்படைக் கொள்கை:**

உலகத்தை நடத்தும் முதற் பொருள் ஒன்று உண்டு. அஃது அறிவே வடிவாய் விளங்குவது; நம் அறிவு நிலையைக் கடந்ததாயினும், உயிர்தோறும் கலந்து உடனாய் நின்று செலுத்திவருவது. அதனைத் தன் உணர்வில் தலைப்பட்டு உணர்ந்து, அதன் அருள்வழி நிற்றலே, ஒருவனுக்குத் தலையாய அறமும், வாழ்க்கையின் முடிநிலைப் பயனும் ஆகும். அங்ஙனம் உணர்வார்க்கு, அஃது அருளொளிப் பேரின்பமாய் அநுபவப்படுவது. இதனால், அதனைச் சிவம் அல்லது சிவன் எனக் குறித்துணர்வதே தலையாய அறிவினார் துணிவு-என்னும் அடிப்படைக் கொள்கையை உடைய ஒழுக்கநெறியே, சைவ சித்தாந்தம் எனப்படும்.

**சிவம்-அறிவு-இன்பம்**

இஃது உலகில் தோன்றி வழங்கும் ஒழுக்க நெறிகளுள் மிகப் பழைமையானதும் அவற்றின் முடிநிலை யானதும் ஆகும். இது சிவனால் வெளிப்படுத்தப் பெற்றமையாலும், அவனுடைய சம்பந்தத்தையுணர வேண்டும் என விதித்தலினாலும், சைவம் (சிவசம்பந்தம் உடையது) எனவும்; முன்தோன்றும் பொது உணர்விற்கு அன்றி, ஆய்வின் பயனாய்ப்பெறும் முடிநிலைத் துணிவாய் நிலைபெறுதல் பற்றித் சித்தாந்தம் (பெற்ற முடிவு அல்லது முடிந்த முடிவு)எனவும் அருளாசிரியர்களால் வழங்கப்பெறுகிறது.

''எவ்வுயிரும் நீங்காது உறையும் இறை சிவம்
என்று எவ்வுயிர்க்கும் அன்பாய் இரு''

**தலையாய பிரமாண நூல்கள்:**

சிவநெறியைத் தெளிவாக உணர்த்தி,நன்னெறிப்படுத்த எழுந்த செந்தமிழ் அருட்பாடல்கள், தேவாரம் முதல் பெரியபுராணம் இறுதியாக எண்ணப்படும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டு ஆகும்! இதன் அடிப்படை உண்மைகளையும், நெறிமுறைகளையும் அளவைமுறையில் உணர்த்தும் நூல்கள் திருவுந்தியார்,திருக்களிற்றுப்பாடியார், சிவஞானபோதம், சிவஞானசித்தி, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம் முதலிய பதினான்கு சாத்திரங்கள் ஆகும்.

**அருமையில் எளிய அழகு:**

சிவநெறியுட் கூறப்பெறும் பல உண்மைகள் உலகப் பொதுமையும், அருமை பெருமைகளோடு விரவிய எளிமையும் உள்ளவை. அவை பிறசமயங்கள் தோன்றி உருத்தெரிய வாராத மிகப் பழங்காலத்திலேயே சொற்செய்து அருநிதியமாகத் தமிழ் மக்களுக்கு வைக்கப்பெற்றவை. சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றி, இன்றும் வழங்கி வரும் திருமந்திரமாலை எனப்படும் பத்தாம் திருமுறையில் வரும் சில சொற்றொடர்களையும் பாட்டுக்களையும் எடுத்துக் காட்டாகக் கண்டு இன்புறலாம்.

''அன்பே சிவமானது'' ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' ''ஆர்க்கும் இடுமின் அவர் இவர் என்னன்மின்'' ''ஒன்று அவன் இரண்டு அவன் இன்னருள்'' என்பவை திருமந்திரத் தொடர்கள்!

யாவர்க்கும் ஆம் இறை
வற்கொரு பச்சிலை;
யாவர்க்கும் ஆம் பசு
விற்கொரு வாயுறை;
யாவர்க்கும் ஆம் உண்ணும்
போதொரு கைப்பிடி
யாவர்க்கும் ஆம் பிறர்க்கு
இன்னுரை தானே!

நெறியைப் படைத்தான்
நெருஞ்சில் படைத்தான்,
நெறியின் வழுவின்
நெருஞ்சில் முள்பாயும்,
நெறியில் வழுவா
தியங்கவல் லார்க்கு
நெறியின் நெருஞ்சில்முள்
பாயகி லாவே.

சார்ந்தவர்க் கின்பம்
கொடுக்கும் தழல்வண்ணன்
பேர்ந்தவர்க் கின்னாப்
பிறவி கொடுத்திடும்,
கூர்ந்தவர்க் கங்கே
குரைகழல் காட்டிடும்
சேர்ந்தவர் தேவரைச்
சென்று உணர்வாரே''

என்பவை திருமந்திரமாலைச் செய்யுள்கள் ! இவற்றால் அறிவுறுத்தப்பெறும் கருத்துக்கள் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படுதற்குரிய சிறப்புடையனவாகத் திகழ்தல் காணலாம்.

**தனிச்சிறப்பு :**

யான் எனது என்னும் செருக்கு அற்றால் அன்றி உயிர்க்கு உய்தி இல்லை என்பதும், எது உயிர்க்கு உணர் பொருளாக உள்ளதோ அதுவாக உயிர் ஆகிறது என்பதும், தத்துவ நூல்களின் அடிப்படைத் துணிபுகள். இத்துணி புகளோடு மாறுபடாதபடி, உண்மையைப் பட்டாங்கு விளக்கி, மக்களை நன்னெறிக்கண் உய்ப்பது தமிழகத்துக்குரிய சிவநெறி ஒன்றே ஆகும். உயர்ந்த பொருளை எண்ணினால் நாம் உயர்கின்றோம். ஆகவே, குறைவிலா மங்கலப் பொருளாகிய சிவத்தைச் ''சிவோகம்' (சிவன் யான்) என உணர்ந்து உபாசிக்கச் சொல்லுகிறது இந்நெறி! அதே சமயத்தில், ''நீயே முதற்பொருள் என்று ஒருபொழுதும் கருதாதே'' என முன் பாதுகாப்புரையும் தரு கிறது. 'நான் முதல் (அகம்பிரம்மம்), என்ற உணர்வினால் யான் என்னும் செருக்கு உள தாவதோடு' முதல்வனை அல்லது அவன் திரு வருளை அறியமாட்டாத அறியாமையும் உள் ளது என எடுத்துக் காட்டுகிறது இந்நெறி. இது முதற்பொருளைத் தலைப்பட்டு உணர்ந்து, அப்பொருளின் அருளாற்றலில், நீர்வழிப்படும் புணைபோல அடங்கி நின்று அன்பு செய்யு மாறு பணிக்கின்றது. ''சேர்வார்தாமே தானாகச் செயுமவன்''

''அவனிவ னானது
அவனருளா லல்லது
இவனவன்ஆகான்என் றுந்தீபற
என்றும் இவனேயென் றுந்தீபற''

என எழுந்த திருவாக்குகள் போல்வன, இங்கு நாம் சிந்திக்கத் தக்கவை.

கடவுட் கொள்கையை உடைய பிற நெறி கள் பலவும், கடவுள் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடப்பது ஒன்றினையே வழிபாடு என விதிக்கும். அவ்வாணை, பெரும்பான்மையும் அறநெறி யாகவே அமைந்து தனிமகனது மன அமைதி யினையும், பொதுவாழ்வின் ஒற்றுமையினை யுமே முடிநிலைப் பயனாகக் கொண்டு நிற்கும். அவை 'அறத்தை விதித்த முதல்வனை மேலான ஓர் உலகத்திற் சென்றே காணுதல் கூடும். அஃது இவ்வுடம்பை நீத்தபின்னரே நிகழத்தக் கது; என வலியுறுத்தும். சிவநெறி அங்ஙனம் அமையாது. முதல்வனது அருளாணையாகிய அறவழியில் ஒழுகுவதொடு, இவ்வுடம்பு உள்ள போதே அவனைத் தலைப்பட்டு உணர்ந்து, அவன்றன் மங்கல குணங்கள் நம்மாட்டு மேம் பட்டு விளங்குவதற்குரிய சிறப்புச்செய்தி முறை களையும், படிநிலையில் வைத்து உணர்த்துகின் றது.

**கடவுளும் மனிதனும் :**

இந்நெறியின்படி:-'இறைவனும் உயிர்க ளும் என்றும் உள்ள பொருள்கள். இறைவன் தானே அறிந்து அறிவிக்கும் இயற்கை முற் றுணர்வுடைய முழுமுதல். அவன் அருளாணை வழியே எல்லா உலகமும் நடைபெறும். உயிர் கள், படலம் படர்ந்த கண்ணைப்போலத் தம் அறிவாற்றலைத் தடுக்கும் இயற்கைக் குற் றம் உடையவை; அக்குற்றம் இருள் மலம் எனப்படும். மலம், மாசு, அழுக்கு, அழுக்காறு, அவா, வெகுளி என்பவை மனத்தின் மாசு என உணர்தல் வேண்டும். உயிர் இம் மாசு நீங்கி வியாபக உணர்வு விளங்கப்பெற்றால் அன்றி, முதற்பொருளையும் உணராது; தன் உண்மை இயல்பையும் உணரமாட்டாது. உயிர்கள் இம் மாசு நீங்கித் தன் அருளொளியைப் பெற்றுத் தன்னைச் சார்ந்து வரம்பில் இன்பத்தில் அழுந்தி நிலைபெறுதற் பொருட்டே, முதல் வன் உலகப் படைப்பை மேற்கொண்டான்.

உலகப் படைப்புப் பயனுடைய செயல் எனத் தெரிவிப்பது சிவநெறி ஒன்றேயாகும். ''ஐயா நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின்- உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந் தொழிந்தோம்'' என்பது திருவாசகம். ஆனால் ''உலகத்திற்போல, வெறும் விளையாட்டே'' என்பது வியாச சூத்திரம்.

உலகம், 'உடம்பு, கரணம், உலகு, நுகர்ச் சிப்பொருள்' என நான்கு வடிவில் இருந்து, மலத்தின் வலியைச் சிறிது நீக்கி, உயிர்க்குச் சிற்றறிவையும் சிறு ஆற்றலையும் விளங்கச் செய்கின்றது. உயிர்கள் கரணங்களைத் தம் வடி வம் என ஒற்றுமைப்பட்டு நின்று, உடம்பை நிலைக்களனாகக் கொண்டு, உலகில் வாழ்ந்து வரும் இந்நுகர்ச்சி, சத்துவம் இராசதம் தாம தம் என்னும் முக்குணங்களுள் ஒன்றனை உயி ரின் மாட்டு மேம்படச் செய்தல்பற்றி,இன்பம் துன்பம் மயக்கம் என்னும் மூன்றனுள் ஒரு வகையாக அடங்கும். இவற்றால், உயிர்கள் விருப்புவெறுப்பும், யான் எனது என்னுஞ் செரு கும் உடையவையாய் நல்வினை தீவினைகளைச் செய்து, அவற்றின் பயனாக வேறுவேறு உடம் பும் இடமும் நுகர்ச்சியும் தரப்பெற்று நுகர்ந்து இறந்தும், பிறந்தும் வரும்.

இங்ஙனம், மெய்ந்நூல்கள் சார்பாக ஆராய்ந்து காணும் பிறப்புநிலை, உயிர்களின் சகல அவத்தை எனப்படும். சகலம்-கலையோடு கூடியது. உடம்பு முதலிய நான்கு உருவிற் புலப்படும் உலகத்திற்கு முதற்காரணமாக, புலப்படாத அருவநிலையில், யாங் கணும் நிறைந்துள்ள சடசத்தியே மாயை எனப்படும். அஃது உள்பொருள்; சங் கரர் கூறுவதுபோல, உள்ளதும் அன்றி இல்ல தும் அன்றிச் சொல்லொணாதது அன்று. அவர் கூறுவதுபோல, முதற்பொருளைத் தன் னுண்மை உணராதபடி மயக்குவதும் அன்று; மல இருளை நீக்கி, உயிர்களுக்கு அறிவை விளக்கும் விளக்குப்போல்வது மாயை. அஃது ஒரோவழி உயிர்களை மயக்குவதற்குக் கார

ணம், அதனோடு விரவித் தன் வலியைக் காட்டும் இருள்மலமே ஆகும். இறைவன் மலத் தடை இல்லாதவன்; மாயைக்குத் தலைவனாய் அதன் உதவியைத் தன் பொருட்டு வேண்டாதவனாய் அதனைக் கடந்தவன்.

இம்மாயையின் நுண்ணிய காரியமே கலை. அது காலம், நியதி முதலிய பிற (மாயையின்) காரியங்களோடு சேர்ந்து உயிரைப்பற்றி நிற்கும் நிலையே சகலம் எனப்படுகிறது.

இனி, கலை முதலியவற்றோடு சேராது, பிறத்தற்குமுன், கருப்பையில் அறிவற்றிருக்கும் குழவியைப்போல, இருள்மலம் ஒன்றிலேயே அழுந்தியிருந்த மூர்ச்சை நிலை ஒன்று உயிர்க்கு உண்டு என்பது தொடர்ச்சி பற்றிக் கருதி உணரப்படும். அஃது அநாதி கேவலம் எனப்படும். கேவலம்-தனிமை. இக்கேவலநிலை நம் அறிவைக் கடந்ததே ஆயினும், அன்றாடம் நமக்கு வரும் உறக்கம், கனவு, நனவு என்னும் நிலைகளில் வைத்து அதன் இயல்பைக் கருதி உணரல் ஆகும். மாயையின் காரியமாகிய பொறிகளையும், அந்தக் கரணங்களையும் விடும்போது, நாம் அறிவு விளங்கப் பெறாமல், இருள் மலத்தில் அழுந்திக் கேவலப்படுகிறோம். அதுவே உறக்கம் எனப்படுகிறது. அக்கருவிகளோடு சேர்ந்து நுகரும் நிலையே நனவு. அதுவே சகலம் எனப் பொதுவாக அறிந்து கொள்க. இனி, பொறி முதலிய கருவிகள் இன்றி அறியாமையாகிய இருளில் அழுந்தும் நிலையே உண்மைக் கேவலம் ஆகும்.

இனி, இவ்வறிவு அறியாமைகளை (சகல கேவலங்களை)க் கடந்து ,இறைவனது அருள் ஒளியைச் சார்ந்து நிற்கும் நிலை ஒன்று உண்டு. அது சுத்தம் (தூய்மை) எனப்படும். அதுவே உயிர்கட்கு இயற்கையானதும், நிலைத்ததும் ஆதல்பற்றி, அது பேரா இயற்கை எனப்படும். அறியாமை, மலத்தால் ஆய் செயற்கை எனவும், சிற்றறிவு, மாயையின் காரியங்களாகிய உபாதிபற்றிய செயற்கை எனவும், பெரியோர் கூறுவர்.

இவ்வரிய கருத்துக்களைப் பின்வரும் பாட்டைக் கொண்டு நினைவிற் கொள்ளலாம்:

கேவல சகல சுத்தம்
    என்று,மூன் றவத்தை ஆன்மா
மேவுவன்; கேவ லந்தன்
    உண்மை; மெய் பொறிகள் எல்லாம்
காவலன் கொடுத்த போது
    சகலனாம்; மலங்கள் எல்லாம்
ஓவின போது சுத்தம்
    உடையன், உற்பவந் துடைத்தே

முண்டகோபநிடதத்தில் மூன்றாம் முண்டகத்தின் முதற் கண்டத்தின் முதல்மூன்று மந்திரங்களின் மொழி பெயர்ப்புக்கள் மேற்கூறிய கருத்துக்கள் அனைத்தும் வேதப் பயனாகவும், வேதாந்தத் தெளிவாகவும் உள்ளவை என க் காட்டும் நோக்குடன் கீழே தரப்படுகின்றன.

1. அழகிய சிறகுடைய பறவைகள்இரண்டு (உயிர், முதல்வன்) இணைபிரியாதவை; ஒரே மரத்தில் தங்குபவை; அவற்றுக்குள் ஒன்று சுவையுள்ள பழத்தை நுகர்கிறது. மற்றையது உண்ணாமல் பார்த்துக் கொண்டிருக்கிறது.

2. ஒரே மரத்திலிருப்பினும் ஒன்று(உயிர்), தலைமையின்றி மதிமயங்கித் திறமையற்றுத் துன்புறுகின்றது; அஃது எப்போது, உயர்ந்ததும் ஆளுந்தன்மை வாய்ந்ததுமாகிய மற்றையதை (முதல்வனை)க் கண்டு அதன் மகிமையைத் தன்னுடையதாகச் சார்ந்து பெறுகிறதோ அப்போது துன்பத்தின் நீங்கியதாகிறது.

3. காண்போன் (உயிர்) தேவத்தின் பிறப்பிடமாய், வினைமுதலாய், ஈசனாயுள்ள புருடனை எப்போது காண்கின்றானோ, அப்போது அங்ஙனம் அறிந்தவன் நல்வினை தீவினைகளை உதறிவிட்டு மாசற்றவனாய் அப்பரம புருடனோடு சாமியத்தை அடைகிறான்.

இங்குக் காட்டியவற்றைப்போல இன்னும் அநேகம் உபநிடதங்களில் உள்ளன. மேற்காட்டியவற்றால் சிவநெறி ஒன்றே வேதத்தோடு செந்தமிழ்ப் பயனாக உள்ளது என்பது இனிது விளங்கும். இச் சிவநெறி உலகமுதல்வன், தானும் தன் சத்தியும் என இருதிறப்பட்டு இயைந்து நின்று, உலகு உயிர்களோடு கலந்து உடனாய் நின்று செலுத்துபவன் என்பதைச் சிறப்பாகக் கண்டு வெளியிடுகிறது.

## ''உமை-முருகு-இறைவர்''

''நம் இந்திய நாட்டுப் பழம்பெருஞ் சான்றோர்களும், தத்துவ ஞானிகளும், தவநெறிச் செல்வர்களும், உலகையும் கடவுளையும் பற்றி ஆராய்ந்தறிந்து உணர்ந்திருந்த கருத்துக்கள் அனைத்தையும், **'சச்சிதானந்தம்'** என்னும் சுருக்கம் மிக்க சொற்றொடர், நன்கினிது தெளிவுற விளக்கி நிற்கின்றது'' என நம் இந்திய நாட்டுப் பெருங்கவிஞரேறு ஆகிய இரவீந்திரநாததாகூர் இயம்புவர் (The Message of the Aranyakas—Tagore). உள்பொருள் ஆகத் திகழும் கடவுட் பொருள் ஒன்றே, சத்து, சித்து, ஆனந்தம் என்னும் முப்பெரும் பண்பும் கூறும் உடையதாக ஒளிர்கின்றது. சத்து - உள்ளது, உண்மை. சித்து-அறிவு. ஆனந்தம்-இன்பம். எனவே, சச்சிதானந்தம் என்பதனைத் தமிழில் உண்மை-அறிவு-இன்பம் என்று வழங்குவர். இம்மூன்று இயல்புகளின் அழகிய சிறந்த பருவடிவ அமைப்பாக விளங்குவதே, ''உமை-முருகு-இறைவர்'' என்னும் சோமாஸ்கந்தர் திருவுருவமாகும். சோமாஸ்கந்த மூர்த்தி நிலையில், சத்து-இறைவன்; சித்து-இறைவி; ஆனந்தம்-முருகன் என விளங்கு தலைச் சமய தத்துவ ஞான நூல்கள் சாற்றுகின்றன.

—ஆசிரியர்



திருவரங்கம் அருள்மிகு மேட்டழகியசிங்கர் கோயில் திருக்கல்யாண மண்டபத்தைச செய்தி - அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் திறந்து வைத்துச் சிறப்புரை ஆற்றுதல்.

பதிவு எண். எம். 7039





திருவரங்கம் அருள்மிகு அரங்கநாத சுவாமி திருக்கோயில் இராயகோபுர, இராசகோபுரத் திருப்பணித் துவக்கவிழாவில் அகோபிலமடம் ஜீயர் சுவாமிகள், ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள், மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு ஆர். சவுந்தரராசன் அவர்கள் முதலிய பெருமக்கள் ஆகியோர் கலந்து கொண்ட காட்சி.



திருஞானசம்பந்தர் தேவாரப் பாடல் பெற்றதும், அருள்மிகு குயிலமுதநாயகி உடனுறை கொடுங்குன்றீசர் எழுந்தருளி விளங்குவதும், பிரான்மலை என வழங்குவதும் ஆகிய திருக்கொடுங்குன்றம் என்னும் பாண்டிய நாட்டுத் தலத்தின் அழகிய தோற்றம்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600 034.
ஆசிரியர் : ந. ரா. முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல்.
அச்சிடுவோர் : தமிழரசு அச்சகம், அரசினர் தோட்டம், சென்னை-600 002.